உள்ளே....
லூரி திறந்தாச்சு!
சிரிப்புப் பக்கங்கள்

# கல்கி

KALKI 4.7.93 ரூ. 3.00



"நாத்திகவாதம் கடவுள் பயத்தைப் போக்கிவிட்டது!"

–அமைச்சர் பேட்டி

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம். நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்ல மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.



இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்

# ஹர்ஷத் மேத்தா:

## பணம் பண்ணும் ஆவேசம்!

"என்னோட ஆசை என்ன தெரியுமா...? இப்போ இருக்கிற வீட்டைப் போல் பத்து மடங்கு பெரிசா ஒரு வீடு வாங்கணும்..."

- சொன்னவர் : ஹர்ஷத் மேத்தா!

- சொன்னது : பாம்பே கிரிண்ட் லேஸ் வங்கியின் chief investments manager விஷ்ணு தேவ்ஸ்கரிடம்!

அப்போது மேத்தா 1500 சதுர அடி ஃப்ளாட்டில், பாம்பே கார் பகுதியில் வசித்து வந்தார். ஒரு டஜன் புரோக்கர்களின் கைப்பிடியில் இறுக்கப்பட்டிருந்த பம்பாய்ப் பணச் சந்தைக்குள் புக முயன்று கொண்டிருந்தார். அந்த முயற்சியில் விரலைச் சுட்டுக் கொண்ட அனுபவமும் ஏற்பட்டிருந்தது!

ஆனால், பணம் பண்ண வேண்டும் என்ற ஆவேச உந்துதல் மேத்தாவை ஆக்கிரமித்திருந்தது. வங்கி மானேஜரிடம் அவர் தெரிவித்த ஆசை மூன்றே வருடங்களில் நிறைவேறியது. 1991இல் மேத்தா தமது மூன்று சகோதரர்கள் கொண்ட கூட்டுக் குடும்பத்துடன் 15,000 சதுர அடி அபார்ட்மெண்டுக்குக் குடிபெயர்ந்தார். கடற்கரையை எதிர்நோக்கிய அந்த அபார்ட்மெண்ட் பத்தாயிரம் சதுர அடி தோட்டத்தின் மத்தியில் அமைந்துள்ளது. பில்லியர்ட்ஸ் ஆட தனி அறை, ஒரு மினி தியேட்டர், குட்டி கால்ஃப் மைதானம் எனப் பணக்கார வசதிகள் அனைத்தும் உள்ளடக்கியது. மேத்தாவின் இந்தச் சொத்தின் மதிப்பு மட்டும் பத்து கோடி ரூபாய்!

ஹர்ஷத் மேத்தா பயணம் செய்ய பிரவுன் நிற 'லெக்ஸஸ்' காரின் மதிப்பு சுமார் 45 லட்சம் ரூபாய்! அதை ஓட்டிய டிரைவருக்கு வெள்ளை நிறக் கையுறைகள் உள்பட டிப்டாப்பான யூனிஃபார்ம். மேத்தாவின் சொந்த உபயோகத்துக்கான Lexus கார் தவிர ஒரு சில இந்திய கார்களும் மூன்று ஜப்பானிய கார்களும் வீட்டு வாசலில்...

'இப்படி உன் செல்வத்தைப் பறைசாற்றாதே!' என்று மேத்தாவை நண்பர்கள் எச்சரித்தார்கள். ஆனால் மேத்தாவின் செவிகளில் அது ஏறவில்லை. ஹர்ஷத்தின் தம்பியும் நெருங்கிய சகாவுமான அஷ்வின் சொன்னார் :

"நாங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்தோம். அதைப் பெருமையுடன் அனுபவிப்பதில் என்ன தவறு?"

ஹர்ஷத் யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவிலும் அஷ்வின் நியூ இந்தியா அஷ்யூரன்ஸிலும் பணியாற்றிய காலத்தில் (சுமார் 13 வருடங்களுக்கு முன்) அவர்கள் இருவரின் மொத்த வருமானமான இரண்டாயிரம் ரூபாயில் குடும்பம் நடந்தது. கடந்த ஆண்டு ஹர்ஷத்தின் நிறுவனங்கள் சுமார் நூறு கோடி ரூபாய் லாபம் சம்பாதித்தன!

"'நீ என்னைக் கவனித்தால் நான் உன்னைக் கவனிக்கிறேன்...' இதுதான் ஹர்ஷத் மேத்தாவின் கொள்கையாக இருந்தது" என்கிறார் ஒரு சர்வதேச வங்கியின் உயர் அதிகாரி. இதைச் சொல்லியா தெரிய வேண்டும்?!!

நன்றி : பிஸினஸ் இந்தியா






# நரசிம்மராவ் என்ன செய்ய வேண்டும்?

1. சேகர், 2. சரோஜா, 3. தாஸ், 4. பழனியப்பன், 5. லலிதா, 6. டெல்லி கணேஷ், 7. பவானி, 8. ராமசந்திரன், 9. சரபேஸ்வரன்

**இன்றைய சூழ்நிலையில் நரசிம்ம ராவ் என்ன செய்ய வேண்டும்? இந்தக் கேள்வியை பலதரப்பட்டவரிடமும் கேட்ட போது, கிடைத்த பதில்களைத் தொகுத்து அளிக்கிறார் நமது நிருபர்...**

**சரோஜா** *(வீட்டு வேலை செய்பவர்)* : ஒரு வாய்த் தண்ணிக்குத் தவியாத் தவிக்குது மெட்ராஸ்! அதுக்கு மொதல்ல ஒரு வழி பண்ணட்டும் சார்! மத்ததை அப்புறம் பேசலாம்!

**ரம்யா** *(கல்லூரி மாணவி)* : ஒரு கோடி ரூபாய் கொடுத்ததா, ஹர்ஷத் மேத்தா, சொல்லி விட்டால், நரசிம்மராவ் பதவி விலகணும்னு சொல்வது தவறு. அப்படியே நரசிம்மராவ் ராஜினாமா செய்து, சரத்பவார் பிரதமராய்த் தேர்ந்தெடுக்கப்படுகிறார்னே வைத்துக் கொள்ளுவோம். அப்போ இன்னொரு பர்ஷத்மேத்தா, பிரதமருக்கு ஐந்து கோடி கொடுத்தேன்னு சொன்னா அவரும் பதவி விலகிடணும். அப்புறம் பி.ஜே.பி. ஆட்சியைப் பிடிச்சா, இன்னொரு கிர்ஷத் மேத்தா, அத்வானிக்கு பத்துக் கோடி கொடுத்ததாச் சொல்வாரு. அவரும் ராஜினாமா... இது என்ன சார்! ஜனநாயகமா? கேலிக்கூத்தா?

**சரபேஸ்வரன்** *(சார்ட்டர்ட் அக்கவுண்டெண்ட்)* : கட்சிக்காரர்கள், நண்பர்களாயிருந்தாலொழிய, தம்மைச் சந்திக்கத் தனி நபர்களுக்குப் பிரதமர் அப்பாயிண்ட்மெண்ட் கொடுப்பது என்பது மரபில்லை. ஹர்ஷத் மேத்தாவுக்கு பிரதமர் அப்பாயிண்ட்மெண்ட் கொடுத்தாரா? அவரை அந்தக் குறிப்பிட்ட தினத்தில் சந்தித்தாரா? என்ன காரணத்துக்காக ஹர்ஷத் மேத்தா பிரதமரை சந்திக்க நேரம் கேட்டார்? தேர்தலுக்கு நன்கொடை கொடுக்க என்று சொல்லி நேரம் கேட்டாரா? இந்த சந்தேகங்களுக்கெல்லாம் ஹர்ஷத் மேத்தா விளக்கம் அளித்து, அது உண்மையாகவும் இருக்கும் பட்சத்தில், பிரதமருக்குரிய 'புரோட்டோகால்' மரபுகளை மீறிய காரணத்துக்காக பிரதமர் பதவி விலகி, முன்னுதாரணமாய் விளங்க வேண்டும்.

**தாஸ்** *(ஆட்டோ டிரைவர்)* : மன்மோகன் சிங்கின், புதிய பொருளாதாரக் கொள்கையால, நம்ம பொருளாதாரம் இப்போதான் ஸ்டெடியா முன்னேறிக்கிட்டிருக்கு. இப்பப் போய் இன்னொரு எலெக்ஷன்னா, நாடு தாங்காது சார்! நரசிம்மராவ் எதுக்கு ராஜினாமா பண்ணணும்? அவரே தொடர்ந்து பதவியில இருக்கட்டும். சட்டப்படி என்ன நடவடிக்கை எடுக்கணுமோ, அதை பங்கு மார்க்கெட் ஊழல் விஷயத்துல எடுத்து, தப்புச் செய்தவங்களைத் தண்டிக்கட்டும்.

**டெல்லி கணேஷ்** *(நடிகர்)* : ஹர்ஷத் மேத்தா, பிரதம மந்திரி பேரில் குற்றம்சாட்டியவுடன், தான் யாரிடமும் பணம் வாங்கவில்லை என்று தானே அறிக்கை விடுகிறார் நரசிம்மராவ்! அது தப்பு என்கிறேன்! பழுத்த அரசியல்வாதியான ராவ் என்ன செய்திருக்கணும்? பணம் வாங்கவில்லை என்று சொன்ன கையோடு நிரூபியுங்கள்; நிரூபித்தால் தான் ராஜினாமா செய்வதாக அறிவித்திருக்க வேண்டாமா? அப்போதுதானே அவருடைய கை சுத்தம் என்று மக்களுக்கு நம்பிக்கை வரும்?

**ஏ. பவானி** *(டாக்டர்)* : ஹர்ஷத் மேத்தாவின் குற்றச்சாட்டு, பரபரப்பை ஏற்படுத்தினாலும், அது கற்பனையானதென்றே தெரிகிறது. முப்பது லட்சம் ரூபாய்தான் அதிகபட்சம் ஒரு சூட்கேஸில் கொள்ளுமாம். இவர் 67 லட்சம் வைத்ததாய்க் கூறுகிறார். எனவே இந்தக் குற்றச்சாட்டு முழுக்க முழுக்க ராம் ஜெத்மலானி அண் கோவின் சதித் திட்டம்தான். ராவுக்குக் களங்கம் ஏற்படுத்தச் செய்கிறார்கள். ஆயினும், பங்குப் பத்திர ஊழலில் ராவுக்கும் சம்பந்தமுண்டு

என்று நிரூபிக்கப்பட்டால், உடனடியாய் பிரதமர் ராஜினாமா செய்யத் தயங்கக் கூடாது.

**லலிதா சுபாஷ் (குடும்பத் தலைவி) :** ஒரு சாதாரண பிரஜையின் சந்தேகத்தைப் போக்க, ராமன், சீதையையே அக்னிப் பிரவேசம் செய்யச் சொன்னார். அப்படியிருக்க ராவ் எம்மாத்திரம்? ஹர்ஷத் மேத்தா ஒரு under trial ஆக இருக்கலாம். ஆனால், சி.பி.ஐ.யின் முன்னாள் இயக்குனர், மாதவன் 'மேலிடம் சுதந்திரமாய் ஊழலை விசாரிக்க விடவில்லை' என்று சொல்லித் தானே ராஜினாமா செய்தார். இன்னொரு முக்கியமான விஷயம், ஹர்ஷத் மேத்தாவை தாம் சந்திக்கவே இல்லை என்று ராவ் இன்னும் சொல்லவில்லை. அரசிலும் காங்கிரஸிலும் மற்றவர்கள்தான் அப்படி கூறுகிறார்கள். எனவே இந்தச் சூழ்நிலையில் தார்மீக அடிப்படையில் ராவ் ராஜினாமா செய்ய வேண்டும். அதுதான் சரிந்து கொண்டிருக்கும் காங்கிரஸின் செல்வாக்கைச் சரிப்படுத்த உதவும்.

**ராமசந்திரன் (இஸ்திரிக் கடைக்காரர்):** இந்த பங்கு பத்திர ஊழலில் இன்னும் யார் யார் பெயரெல்லாம் அடிபடப் போகுதோ தெரியலை. இது விஷயமாய், நம்ம ஊர் சிதம்பரத்தோட ராஜினாமாவை வாங்கிக் கொள்ளத் தயங்காத நரசிம்மராவ், இப்போது தான் மட்டும் ராஜினாமா பண்ணாமல் இருப்பது ஆச்சரியமாக இருக்கிறது.

**பழனியப்பன் (வீட்டு வேலை செய்பவர்) :** ஒரு கோடி ரூபாய் டில்லி ஊழலைப் பத்தி இப்போ பேசறாங்க! நம்ம ஊர்ல இப்போ எத்தனை கோடி ரூபாய் விஷயங்களைப் பத்தியெல்லம் பேப்பர்ல எழுதறாங்க! யாரும் ராஜினாமா பண்ண வேணாங்க. அடுத்த எலெக்ஷன் வந்தா, ஜனங்களே பார்த்து ஒரு முடிவு கட்டிடுவாங்க.

**ஆர். சி. சேகர் (தனியார் நிறுவன எக்ஸிகியூட்டிவ்) :** ராம்ஜெத்மலானியின் ஆழ்ந்த சட்ட அறிவு இப்படி மக்களை குழப்புவது இது முதல் தடவை இல்லை. கல்லெறிந்து பார்ப்போமே! பழம் விழுந்தால் சரி! இல்லையெனில் நஷ்டமேதுமில்லை என்கிற ரீதியிலான முயற்சிதான் இது. இதனால் ஆட்சி மாற்றம் ஏற்பட்டு, பி.ஜே.பி. ஆட்சிக்கு வந்தால், ஒரு நன்றிக் கடனாக, விஷயத்துக்குத் தண்ணீர் தெளித்து விடப்படும். ராவ் அரசு, தொடருமானால், நான் உண்மையைச் சொன்னதால், பழிவாங்குகிறார்கள் என்று ஹர்ஷத் மேத்தா கூறலாம். எப்படியானாலும் இது ஒரு ஸ்டண்ட் என்பதில் சந்தேகமில்லை.

தொகுப்பு : எஸ். சந்திரமௌலி
படங்கள் : கோபிநாத்






'இடைநிலை ஆசிரியர் பயிற்சி பெற்றுத் தேறியவர்களுக்கு வேலை வழங்க, அரசு ஒரு தேர்வு வைத்து வேலைக்கு எடுக்கப் போகிறதாம். இதற்குச் சுமார் 30,000 பேர் காத்திருக்கிறார்கள். இவர்களிடம் தேர்வு மனுவுக்காக 5 ரூபாய் வீதம் 1,50,000 ரூபாயும், தேர்வுக் கட்டணமாக 50 ரூபாய் வீதம் 15,00,000 ரூபாயும் அரசு வசூல் செய்து தேர்வு நடத்தப் போகிறது. வெற்றி பெற்றவர்களுக்கு அரசு வேலை வழங்குமா? அல்லது வெறும் கண் துடைப்பா? அல்லது, எம்.எல்.ஏக்கள், கட்சிக்காரர்கள், காலியாய் இருக்கும் 8,000 இடங்களுக்குத் தேர்வு செய்யப்படும் 8,000 பேர்களிடம் சுமார் 4 கோடி ரூபாயை வசூல் செய்து கொள்ள வழி வகுக்கிறதா?'

- நன்னிலம் வாசகர் ஒருவர் எழுப்பியிருக்கும் இந்தக் கேள்வி குறித்து, முன்னாள் கல்வித் துறை அதிகாரி ஒருவரிடம் விசாரித்தோம்.

''தமிழகத்தில் சுமார் 36,000 ஆரம்ப - இடைநிலைப் பள்ளிகள் இருக்கின்றன. எனவே நிறைய ஆசிரியர்கள் தேவைப்படுவார்கள். முன்பு மாவட்டக் கல்வியதிகாரி, ஆட்சியாளர் பிரதிநிதி, ஒரு கல்வியாளர் என்று ஒரு குழு ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்து வந்த நிலைமை மாறி, எம்.எல்.ஏக்கள், எம்.பிக்கள் தேர்ந்தெடுக்கும் முறை கழக ஆட்சிக் காலத்தில் உருவாயிற்று.

''கர்நாடகாவுக்குப் போய், பணத்தைக் கொடுத்து, பயிற்சி எதுவும் பெறாமலே சான்றிதழ் பெற்ற ஆசிரியர்கள் உருவானார்கள். சிறுபான்மையினர், குறிப்பாக - கன்யாகுமரி மாவட்டத்தில் உள்ளவர்கள், ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகள் ஆரம்பித்து, சான்றிதழ் கொடுத்துச் சில ஆயிரம் ஆசிரியர்கள் உருவானார்கள். இது போதாது என்று பல்கலைக் கழகங்கள் வேறு பி.டி. கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ் ஆரம்பித்து, சில நூறு ஆசிரியர்கள் தோன்றினார்கள். இப்படி உருவான 'ஆசிரியர்களி'ன் திறமையை எப்படி எடை போடுவது? ஐ.ஐ.டி., ஜிப்மெர் மாதிரி நுழைவுத் தேர்வு வைத்துத் தேர்ந்தெடுப்பதுதான் வழி!''

ஆனால், முன்னாள் அமைச்சர் க. ராஜாராம் நன்னிலம் வாசகரின் எண்ணத்தை முழுக்க ஒப்புக் கொள்ளுகிறார் :

''மொத்தம் 8,000 ஆசிரியர் பதவி காலி என்றால், ஒவ்வொரு எம்.எல்.ஏவுக்கும் இத்தனை ஆசிரியர்கள் என்று கோட்டா போட்டுப் பிரித்துக் கொடுத்து விட்டால், கோடிக்கணக்கில் வசூல் செய்ய இதுதான் வசதியான வழி. அறத்தையும், நேர்மையையும், நீதியையும் கல்வி வாயிலாகச் சொல்லித் தர வேண்டிய ஆசிரியர்கள், லஞ்சம் கொடுத்து அந்தப் பணியை மேற்கொண்டால், மாணவர்களின் எதிர்காலம் எப்படி உருவாகும் என்று யோசித்துப் பார்க்க வேண்டும்.

''சர்வீஸ் கமிஷன் தேர்தலில், தேவைப்படும் ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்துப் பணியில் அமர்த்தலாம். இல்லையென்றால் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சில் பதிவு செய்தவர்களின் வரிசைக் கிரமப்படி, ஆசிரியர் பயிற்சித் தேர்வு பெற்றவர்களை, காலியாய் இருக்கும் பதவிகளுக்கு நியமிக்கலாம்.

''இது இரண்டும் இல்லாமல், தேர்வு மூலம் பணம் வசூலித்து வேலைக்கு அமர்த்தும் முறையில், கோடிக்கணக்கான ரூபாய் லஞ்சம் உருவாகும் நிலைமைக்கு நிச்சயம் வழிவகுக்கும்.''

- சாருகேசி



''வரப்புயர நீர் உயரும்;
நீர் உயர நெல் உயரும்;
நெல் உயர குடி உயரும்;
குடி உயர கோன் உயரும்;
கோன் உயர?''
''கட்அவுட் உயரும் சார்!''

- சீர்காழி சாமா.



* மொய்லி

* எஸ். எம். கிருஷ்ணா




கர்நாடக முதல்வர் வீரப்ப மொய்லி பதவிக்கு வந்து ஆறு மாதங்களாகின்றன. மொய்லிக்கு எதிரான போராட்டத்தைத் துவக்கியிருக்கிறார் உதவி முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணா. ஆரம்பத்திலிருந்தே இவரது குறி முதல்வர் நாற்காலியின் மீது தான்.

பங்காரப்பா பதவியிலிருந்து இறங்கியவுடனேயே அந்த நாற்காலியைக் குறி வைத்தவர்களில் கிருஷ்ணாவும் ஒருவர். ஆளாளுக்கு முயற்சிகள் செய்து கொண்டிருக்க, எஸ்.எம். கிருஷ்ணாதான் முதல்வர் என்பதாக உறுதியான எதிர்பார்ப்பு இருந்தது. காரணம், எஸ்.எம். கே, நரசிம்மராவின் ஆள். பெருவாரியான எம்.எல்.ஏக்களின் ஆதரவு மொய்லிக்கு இருந்து விட்டபடியால், நரசிம்மராவ் மொய்லியைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாகி விட்டது.

மொய்லி முதல்வர் என்றவுடன் அப்செட் ஆகி விட்டார் கிருஷ்ணா. 'முதல்வர் பதவிக்குக் குறைந்து எந்தப் பதவியும் ஏற்க மாட்டேன்' என்றார். மொய்லிக்கும் எஸ்.எம். கிருஷ்ணாவை 'மடியில் கட்டிக் கொள்வதில்' சுத்தமாக விருப்பமில்லை. பேசாமல் விட்டு விடலாம் என்றுதான் இருந்தார். அப்படியே கை கழுவியும் விட்டிருப்பார். மறுபடி நரசிம்மராவின் தலையீட்டால் டெல்லியிலிருந்து பெங்களூர் வந்த மொய்லி, நேராக எஸ்.எம். கிருஷ்ணாவின் வீடு தேடிச் சென்று, தம்முடைய மந்திரி சபையில் சேர்ந்து ஆதரவு கொடுக்க வேண்டும் என்று 'வேண்டுகோள்' விடுக்க வேண்டியதாகி விட்டது.

எஸ். எம். கிருஷ்ணா உதவி முதல் மந்திரியாக அறிவிக்கப்பட்ட அந்த நிமிடத்திலிருந்தே இரண்டு பேருக்கும் 'பனிப் போர்' ஆரம்பித்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். ''கிருஷ்ணாவை உதவி முதல் மந்திரியாக நியமித்திருக்கிறீர்களே... மற்ற காபினெட் அமைச்சர்களை விட கூடுதல் அதிகாரம் எதுவும் அவருக்கு உள்ளதா?'' என்று நிருபர்கள் கேட்க, ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அரசியல் சட்டம் கூடுதல் அதிகாரம் எதையும் உதவி முதல் மந்திரிக்கு வழங்கவில்லை'' என்றார் மொய்லி.

அப்போதிலிருந்து ஆரம்பம்!

தமக்கு ஐ.ஏ.எஸ். அதிகாரிதான் செயலாளராக இருக்க வேண்டும், கேபினெட் மந்திரிகளை விட பெரிய சேம்பர் வேண்டும் என்றெல்லாம் அடம்பிடித்தார் கிருஷ்ணா. மொய்லி கண்டுகொள்ளவில்லை. மேலிடத்துக்கு 'முறையீடு' போனது. மேலிடம் தலையிடவே மொய்லி ஒப்புக் கொள்ள வேண்டியதாகி விட்டது.

அவ்வப்போது மொய்லியைப் பற்றிய அதிருப்தியை ஜாடை மாடையாகத் தெரி

# பஸ் டாக்

"என்ன முன்சாமி ரெண்டு நாளா இந்த சைட் வர்லை. எங்கனாச்சும் வெளியூர் பூட்டியா?"

"க்கும்.... நா என்ன டெல்லிலே மந்திரியாவா கீறேன்.... நெனைச்ச நேரத்துக்கு நெனெச்ச நாட்டுக்கு ஏரோப்பிளேன்லே பறக்கறதுக்கு...?"

"இன்னாபா இப்படி சலிச்சுக்கறே?"

"பின்னே இன்னாபா... அவனவனும் இங்கே வெயிலே மண்டை காஞ்சுக்கினு கீறான். டெல்லிலே பதினாலு மந்திரிங்க சோக்கா பிளேன் ஏறி வெளிநாடு சுத்தப் பூட்டாங்க. இன்னாட சமாசாரம்னா... ஏதோ அல்லாரும் கூடிப் பேசன்றாங்க... வேவாரத்தை மஜாவாக்கன்றாங்க... இவங்க போய் வர்ற செலவுத் துட்டுக்காவது எதுனாச்சும் நடக்குமோ இன்னாமோ போ... யார் கேட்கறது?"

"ஆமாம்பா... ஏதோ லண்டன்ல கீதே நம்ம தூதாபீஸ்... அதுல கீற அதிகாரிங்கள்லாம் நம்மூர்லேர்ந்து வந்து போற மந்திரிங்களைக் கவுனிச்சு கவுனிச்சே பேஜாராப் பூட்டாங்கன்னும் பேசிக்கினாங்கப்பா..."

"அந்தச் சொல்லு... ஆங்... அப்பால இன்னாபா கையில மூட்டை? பெரிசாவே கீது?"

"ரேஷன் அரிசிப்பா.... ஒரே நாத்தம்... இன்னா பண்றது? இத்தையாவது போட்றானேன்னு பேசாமே வாங்கினு வர்றேன்...."

"இருக்கும்பா... ஏன்னா... இப்போ நாடிக்கார இஸ்டேட்டுலேயும் - அதாம்பா பஞ்சாபு... அப்பால ஹரியானாவுலேயும் எக்கச் சக்கமா வெளெஞ்சிடுச்சாம். அதனால கவர்மண்டுலயும் கண்ணுமண்ணுத் தெரியாம வாங்கிப் போட்டுட்டு, அந்தயெல்லாம் வெக்கறதுக்குக்கூட எடமில்லாம வெட்டவெளில வெச்சிக்கினுகீறாங்களாம். இப்படி முப்பது லட்சம் டன்னு வெளிலயே கெடக்காம்பாம்! அத்தெல்லாம் கெட்டுப் போவாமே, வேற இன்னாபா ஆவும்? கட்சீல உன்ன மாதிரி என்ன மாதிரி இருக்கிற ஏமாளிங்க தலைலதானேபா கட்டிவுடுவானுவ!"

"குன்சா சொன்னே போ. ஆமா கந்சாமியைப் பார்த்தியா?"

"பார்த்தேம்பா. அவன் வூட்டுக்காரிக்கு இடுப்பு வலின்னு கோஷாஸ்பத்திரிக்கு இட்டுகினு போனான்..."

"அப்படியா? அப்பால ஒரு டமாஷ் தெரியுமா? இடுப்பு வலின்னதும் கியாபகம் வருது....!"

விப்பது கிருஷ்ணாவின் வழக்கம். இப்போது வெளியிட்டிருப்பது இந்தப் புகைச்சலின் ஒரு கட்டம்தான்.

**எஸ்.** எம். கிருஷ்ணா மற்றும் ராஜசேகர மூர்த்திக்கு ஆதரவாக நாற்பதுக்கும் மேற்பட்ட எம்.எல்.ஏக்கள் ஆதரவு இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் கர்நாடக மக்கள் மத்தியில் இப்படி ஆறு மாதங்களுக் கொருமுறை ஆட்சி மாற்றமோ முதல்வர் மாற்றமோ ஏற்படுவது பற்றி அதிருப்தியே நிலவுகிறது. மொய்லி ஆட்சிக்கு வந்து பிரமாதமான காரியங்கள் எதையும் செய்யவில்லையே தவிர, மக்களிடையே ஓர் எதிர்பார்ப்பை உருவாக்கியிருப்பது உண்மை. நல்ல அரசாங்கம் தருவார் என்பதும் மொய்லியிடமிருந்து நிறைய எதிர்பார்க்கலாம் என்பதும் மக்களின் நம்பிக்கை.

"இப்போது எதற்காக முதல்வரை மாற்ற வேண்டும்? இந்த அதிருப்தியாளர்களாலேயே மொய்லி பற்றியோ மொய்லியின் அரசாங்கம் பற்றியோ எந்தக் குற்றச்சாட்டும் கூற முடியவில்லை. ஐ.ஏ.எஸ். அதிகாரி மாற்றம், 'செயல்படும் விதம் சரியில்லை...' என்பது போன்ற பொத்தாம் பொதுவான குற்றச்சாட்டெல்லாம் மக்களிடம் எடுபடாது. இந்த அதிருப்தியாளர்கள் மக்களிடம் கெட்ட பெயர்தான் வாங்கிக் கொள்ளப் போகிறார்கள் பாருங்கள்" - என்றார் மொய்லி ஆதரவு எம்.எல்.ஏ. ஒருவர்.

மொய்லியை சரியான விதத்தில் மடக்குவதற்கு எஸ்.எம். கிருஷ்ணா சந்தர்ப்பம் பார்த்திருந்தபோதிலும் சரியான சந்தர்ப்



''இன்னாபா டமாஷ்?''

''இந்தப் பொம்பளீங்கள்லாம் சேர்ந்துகினு, பொம்பளீங்க நலத்துறை மந்திரியா கீறாங்களே மார்க்கரேட் ஆல்வா... அவுங்க ஃபங்ஷன்ல போயி, எங்களுக்கெல்லாம் பிரசவ லீவு குடுக்கிறா மாதிரி அந்தச் சமயத்திலே எங்க ஊட்டுக்காரங்களுக்கும் பதினெஞ்சு நாள் பிரசவ லீவு குடுக்கணும்னு கேட்டுக்கினாங்களாம்...''

''அதுக்கு அந்தம்மா இன்னா சொன்னாங்களாம்?''

''பெத்துக்கின புதுகல நீங்கள்ளாம் கொழந்தையப் பார்த்துக்கினு இருப்பீங்களா.... இல்லே, பிரசவ லீவுலே கீற உங்க புருஷனையும் சேர்த்துப் பார்த்துக்கினு பேஜார் படுவீங்களானு சிரிக்கக்கினே கேட்டு கில்லாடிக் கணக்கா நழுவிட்டாங்களாம்.''

''கரீட்டுதானே! அடடே.... நம்ம பக்கிரிசாமி முன்னாலே கீறான் பாரு....''

''அட, ஆமா.. இன்னாபா பக்கிரி குந்திக்க எடம் கெடைக்கிலியா?''

''அடுத்த இஸ்டாபுல எறங்கத்தானேபா போறேன்....''

''இன்னாபா சமாசாரம்? ஊடு மாறிக்கினயா?''

''இல்லபா... போஸ்ட்டாபீஸ் போறேன். என்னோட அண்ணாத்தே பாம்பேலேகீறாரே... அவருக்குக் கொஞ்சம் மணியார்டர் பண்ணனும்.''

''இன்னாபா இது...பாம்பேல கீற அண்ணாத்தைக்கு நீ துட்டு அனுப்புறியா? உதாரா கீதே?''

''ஆமாம்பா. அங்க வெடிகுண்டு வெடிச்சுக் கலேபரமாச்சே, அப்போருந்தே வேவாரமெல்லாம் பாதிக்குப் பாதியா படுத்திருச்சாம்பா. அண்ணாத்தையே எழுதியிருந்தாரு. அத்தொட்டுதான்பா மணியார்டர் பண்ணப் போறேன்....''

(தில்லியிலிருந்து : ராஜீவி நரசிம்மன்,
பம்பாயிலிருந்து :
அம்ருதா பார்த்தசாரதி
அனுப்பிய செய்திகளின்
அடிப்படையில்....)

பம் எதுவும் கிடைக்கவில்லை. எஸ்.எம். கிருஷ்ணாவின் அதிகாரத்தில் இருக்கும் பவர் கார்ப்பரேஷன் சேர்மன் பதவிக்கு கே. எஸ். தாஸைப் போட வேண்டும் என்று விரும்பினாராம் கிருஷ்ணா. இதை மொய்லியிடம் தெரிவிக்க, மொய்லியும் ஓகே சொல்லியிருக்கிறார். சம்பந்தப்பட்ட தாஸ், கிருஷ்ணாவின் ஆதரவாளர். அவரைக் கிருஷ்ணாவிடம் தாரை வார்த்து விடக் கூடாது என்று மொய்லி நினைத்தாரோ என்னவோ, தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டார். அந்த தாஸை தம்முடைய செயலாளராக நியமித்தவர், தம்முடைய செயலாளராக இருந்த ரவீந்திரா என்பவரை பவர் கார்ப்பரேஷன் சேர்மனாக நியமித்து விட்டார். அதாவது, கிருஷ்ணாவின் ஆளையும் தம்முடன் வைத்துக் கொண்டாயிற்று; தம்முடைய ஆளையே சேர்மனாகவும் போட்டாயிற்று. கிருஷ்ணாவின் கோபத்திற்கு இதுதான் காரணம்.

**ஹ**ர்ஷத் மேத்தாவின் வெடிகுண்டு வீச்சால் மத்திய அரசாங்கமே தத்தளித்துக் கொண்டிருக்கும் வேளையில், மொய்லியின் எதிர்ப்பாளர்கள் கரம் ஓங்கும் என்று சொல்வதற்கு இல்லை. தவிர, எஸ்.எம். கிருஷ்ணா நரசிம்மராவ் ஆள் என்பதால் அங்கே நரசிம்மராவுக்கு விழுந்த அடியின் பாதிப்பு நிச்சயம் இங்கேயும் எதிரொலிக்கும். காய்களை நகர்த்துவதில் வல்லவரான மொய்லி, இந்தத் தாக்குதலைச் சமாளிப்பார் என்றே தோன்றுகிறது.

- அமுதவன்

# தாத்தாவும் மேத்தாவும் சந்தித்தபோது...

**முன்னெச்சரிக்கை!**

இது நீங்கள் சிரிப்பதற்காக. ராவ் சம்பந்தப்பட்ட சமாசாரம் என்பதால் ஒருவேளை சிரிப்பு வராமல் போகலாம். மாறாகக் குலுங்கி, குலுங்கி அழவும் தோன்றலாம்! மேலும் இது கதையோ, நாடகமோ, கட்டுரையோ, முழுக் கற்பனையோ, முழு நிஜமோ இல்லை என்பதனை முன்னதாக அறியக் கடவீர்கள்!

ஹிந்தி அல்லது தெலுங்கில் 'எங்கே நிம்மதி?' பாடிக் கொண்டு நரசிம்ம ராவ் தாமே கார் ஓட்டிக் கொண்டு டெல்லி யின் ஒதுக்குப்புறமான பகுதி வழியே செல்கிறார். திடீரென்று யாருமில்லா அத்வானப் (அத்வானி அல்ல) பிரதேசத்தில் வண்டி நின்று விடுகிறது. ராவ் இறங்கி முன்புறம் வந்து குடைய ஆரம்பிக்கிறார். மெல்ல அவர் மேல் இருள் கவிகிறது. அருகில் வேகமாக ஒரு கார் வந்து நிற்கிறது. ஒரு நெடிய உருவம் இறங்குகிறது. ராவ், சிவாஜி ஸ்டைலில் கண்ணை இடுக்கிப் பார்க்கிறார்.

ராவ் : நீ... நீயா?

ஹர்ஷத் : எதிர்பார்க்கலை, இல்லை? *(சிரிக்கிறார்.)*

ராவ் : வேணாம். போயிடு. என் முன்னாடி நிக்காதே! தேசத் துரோகி! தேசத் துரோகி!

ஹர்ஷத் : பி காம்! பி காம்! வார்த்தைகளை, வாக்குறுதி போல விரயம் செய்யாதீர்கள்.

ராவ் : நல்லாருப்பியா நீ? இப்படி அபாண்டமா பழிபோட்டியே. நான் எப்ப உன்னைச் சந்திச்சேன்? போட்டோல கூட சரியாப் பார்த்ததில்லை.

ஹர்ஷத் : அதனாலென்ன, இப்ப நல்லா பார்த்துக்குங்க. அன்னிக்கு, நவம்பர் ஃபோர்த் அன்னிக்கு உங்க ஆபீஸ்ல அப்ப கரன்ட் வேற இல்லை. ஏ.ஸி.ரூம். கர்ட்டன் ஒதுக்கியும் கூட மங்கலான வெளிச்சம்.

ராவ் : பொய்! பொய்! கரன்ட் இருந்தது.

ஹர்ஷத் : நான் வந்த போதா?

ராவ் : ஆமா. நோ. நோ... நீ வரலை. வரவேயில்லை. *(கண் கலங்குகிறார்.)*

ஹர்ஷத் : அடடே, இப்ப என்ன ஆச்சுன்னு இப்படி அழறீங்க!

ராவ் : பாரு, நான் உனக்கு என்ன துரோகம் பண்ணேன்? வெற்றிகரமா, ஆட்சிக்கு வந்து மூணாவது வருஷம் பிறந்து, வெற்றி மாநாடு கொண்டாட இருந்த நேரத்துல...

ஹர்ஷத் : அடடே, நீங்க ஜெயலலிதாவை இன்னுமா ஃபாலோ பண்றது? உறவைக் கட் பண்ணிட்டது ஞாபகம் இல்லியா?

ராவ் : கிண்டல் வேணாம். ஏன் இப்படி என் மேல விழுந்து பிராண்டறே? ஒரு கோடி... கண்ணாலே கூடப் பார்த்ததில்லைய்யா! கோடிக்கு எத்தனை சைபர்?

ஹர்ஷத் : மிஸ்டர் ராவ்! இங்க, உங்களையும் என்னையும் தவிர வேறு யாரும் இல்லை! எதுக்காக டயலாக் விடறீங்க?

ராவ் : ஆறவே இல்லையா! திடுதிப்புனு இப்படி பண்ணிட்டியே.

ஹர்ஷத் : காலத்தின் கட்டாயம்!

ராவ் : பாரு, பாரு! அரசியல்வாதி மாதிரி பேசற.

ஹர்ஷத் : அரசியல்வாதிங்கள்லாம் ஷேர் புரோக்கர் மாதிரி பேரம் பேசறப்போ நான் அரசியல்வாதி மாதிரி பேசறதுல என்ன தப்பு? என்ன தப்புங்கறேன்?

ராவ் : யாரு? யார் யாரு பேரம் பேசினாங்க?



சொல்லு! என்னை மட்டும் மாட்டி விட்டுட்டியே. என்னமோ சதி நடந்திருக்குது. ஏடு கொண்டலு வாடா! ஏண்டா இப்படிச் சோதிக்கற?

ஹர்ஷத் : யோசிக்கப் பாருங்க! நான் எவ்ளோ பெரிய புத்திசாலி! என்னைப் போய் ஜெயில்ல போட்டு... என் ப்ரெயின் எப்படிப்பட்டது தெரியுமா உங்களுக்கு? என்னோட விளையாடிட்டீங்க.

ராவ் : நீ பண்ணதெல்லாம் நியாயமா?

ஹர்ஷத் : சினிமா மாதிரி பேசாதீங்க. நான் தப்புப் பண்ணா அதுக்கான விலை கொடுத்துட்டுப் போறேன்!

ராவ் : ஐயோ! கொடுக்கலை! ஒரு விலையும் கொடுக்கலை நீ!

ஹர்ஷத் : இந்த விளையாட்டு போதும்னு நினைக்கறேன். கார் ரிப்பேரா? இஃப் யூ டோன்ட் மைண்ட், என் கார்ல வரலாமே!



ராவ் : உன் கார்லயா? கடவுளே! வேற வழியில்லை போலிருக்கே! வீடு போய்ச் சேரணுமே! ஐயோ வரேன். வந்து தொலையறேன், வா!

(ஹர்ஷத் மேத்தா காரில் ராவ் ஏற, கறுப்புக் கண்ணாடியை ஏற்றி விட்டு மேத்தா வண்டியை ஸ்டார்ட் செய்கிறார்.)

ஹர்ஷத் : என் கார் ரொம்ப புண்ணியம் பண்ணியிருக்கணும்! வாட் டு யூ ஸே? டேப் போடட்டுமா? கேட்கறீங்களா?

ராவ் : ஐயோ அதென்ன டேப்பு? நான் தான் உன்னைப் பார்க்கவே இல்லையே! ஸோ, பேசவும் இல்லையே! டேப்பு எங்கேர்ந்து முளைச்சது? ஆ! புரிஞ்சு போச்சு! சௌத் இண்டியால மயில்சாமின்னு ஒரு காலேஜ் ஸ்டூடண்ட்டாம். யாரை மாதிரி வேணா பேசுவானாம். அவனை மாதிரி யாரையோ பிடிச்சி நீ என்னை மாதிரி பேச வெச்சிருக்கே. கரெக்ட்?

ஹர்ஷத் : மிஸ்டர் ராவ்! ஏன் இப்படி பதட்டப்படறீங்க. நான் சொல்றது பாட்டு டேப். வெஸ்டர்ன், இண்டியன், பாப், க்ளாசிகல் எது வேணும்?

ராவ் : பாவி! உன்னை நம்ப முடியாதுடா! இப்பக் கூட நாம பேசறதை டேப் பண்ணுறியோ என்னமோ! கடவுளே! வயசான காலத்துல எனக்கெதுக்கு இந்தக் கஷ்டமெல்லாம்? பாருப்பா... தயவுசெஞ்சி வண்டிய நிறுத்திடு... நான் போறேன். எங்கியாவது போறேன்...

ஹர்ஷத் : கடைசி வரைக்கும் அப்ப ஒத்துக்கறதா இல்ல? அந்நாள் சொன்னது சரிதான்!

ராவ் : யாரு? யாரு சொன்னா? என்ன சொன்னா?

ஹர்ஷத் : உங்க அபிமான எம்.பி. மிஸ்டர் மித்தல்! இவரு லேசுப்பட்டவரு இல்லீங்க. எதுக்கும் ரசீது வாங்கி வெச்சிக் கங்கன்னாரு.

ராவ் : பொய்! பொய்! வாங்கின லஞ்சத்துக்கே எவனும் ரசீது தந்ததா சரித்திரம் இல்லை. வாங்காத லஞ்சத்துக்கு எப்படி தந்திருப்பேன்?

ஹர்ஷத் : அதெல்லாம் என் வக்கீல் தான் சொல்வார். உரிய காலத்துல எவிடன்ஸ் வெளிவிடறதாச் சொல்லியிருக்காரே, பேப்பர்ல பார்க்கலை?

ராவ் : மூணு வேளை சோப் போட்டு கழுவி, என் கை எப்பவும் சுத்தம்டா! பாரு! (கைநீட்டிக் காட்டுகிறார்) வாய்மையே வெல்லும்! சத்ய மேவ ஜெயதே!

(இதற்குள் ராவ் வீட்டை நெருங்க ஹர்ஷத்தின் சொகுசு மாடல் கார் சத்தப் படுத்தாமல் நிற்கிறது. ராவ் கதவைத் திறந்து கொண்டு தள்ளாடி இறங்குகிறார்.)

ராவ் : நல்லவேளை யாரும் பார்க்கலை! சீக்கிரமா இங்கிருந்து போயிடு.

ஹர்ஷத் : ஒகே! அடுத்த வாரம் ஒரு வீடியோ கேஸட் அனுப்பறேன். போட்டுப் பாருங்க!

ராவ் : (சட்டென்று நின்று, திரும்பி ஓடி வந்து) என்னது! வீடியோவா! ரசீதுன்னே, கேஸட்டுன்னே, இப்ப வீடியோ வேறயா? சொல்லிடு! எப்ப எடுத்தது?

ஹர்ஷத் : ரிலாக்ஸ் ஐ ஸே! நான் சொன்னது மிக்கி மௌஸ் கார்ட்டூன் கேஸட். வரட்டுமா?

(சிரித்தபடி மேத்தா காரை ஓட்டிப் போக, வாங் ஷாட்டில் ராவ் 'சட்டி சுட்டதடா' பாடியபடி மெல்ல நடந்து போகிறார்.)

கற்பனை : கிச்சா


அரசு அதிகாரிகள்
மற்றும் பலர்...
வங்கிகள்
பாங்கு மார்க்கெட் ஊழல்
சிதம்பரம்
நரசிம்மராவ்
மன்மோகன் சிங்


பிரதமரை, ஒரு கோடி ரூபா தொடர்பா, நாடாளுமன்றக் கூட்டுக் குழு விசாரிக்கணும்னு அம்மா ஒண்ணும் சொல்லலே... அந்த நாய் தான் பல்லைக் காட்டுது...
எஸ். ஆர். பாலசுப்ர மணியன்


தொழில் தொடங்குங்க! தமிழகத்தை இங்கிலாந்திலேயே டாப்பா கொண்டு வந்துடலாம்!...
சூப்பர் ஐடியா! பிரிட்டிஷ் கேஸ் தொழில் ஆரம்பிப்போம், சேல்ஸ் பிச்சுக்கிட்டு போவும்...
அட, போங்க சார்! அது அந்தக் காலம்... இப்ப, குட்கேக்-குத் தான் டிமாண்ட்!...
தொழில் அதிபர்கள்



கல்கி



1993
ஜூலை 4
மலர் : 51
இதழ் : 49
ஸ்ரீமுக
ஆனி 20

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. – பாரதியார்.

# அத்வானி அணிந்த மலர்க்கிரீடம்!

அத்வானி மீண்டும் பி.ஜே.பி. தலைவர் ஆகியுள்ளார். வாழ்த்துகிறோம். சீக்கிரம் பிரதமர் என்ற முறையிலும் அவர் நமது வாழ்த்துக்களைப் பெறப் போகிறாரா இல்லையா என்பது இந் நாட்டு மக்களின் கையில்தான் உள்ளது. ஆனால் அதற்கான சாத்தியக்கூறுகள் மிக அதிகமாகவே இருப்பதை நம்மால் காண முடிகிறது. பி.ஜே.பி. ஆதரவு வோட்டுக்கள் இருக்கட்டும்; தனது தவறுகள் காரணமாகவே காங்கிரஸ் படிப்படியாக மக்களிடம் மதிப்பிழந்து வருகிறது. தவறுகளைப் பட்டியலிட அவசியம் இல்லை. சமீப சரித்திரம்தான். அதுவும் ஹர்ஷத் மேத்தா – பிரதமர் விவகாரம் வெடித்த பிறகு மக்களுக்கு காங்கிரஸ் கட்சியிடம் இருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் போய் விட்டது. வேறு சக்திவாய்ந்த எதிர்க்கட்சி என்று சொல்லும்படி ஏதுமின்றி, எல்லோரும் பிளவுபட்டுக் கிடக்கும் போது, பி.ஜே.பியின் வெற்றி வாய்ப்புக்கள் மிகவும் அதிகமே. அடுத்த பிரதமர் பி.ஜே.பியைச் சேர்ந்தவராக இருப்பார் என்ற நம்பிக்கையின் பேரில்தான் அக் கட்சியும் அத்வானியைத் தலைமை ஏற்கும்படி கோரியுள்ளது என்று கருதலாம். தவிர, முரளி மனோகர் ஜோஷி போன்ற இன்னும் சிலருடன் ஒப்பிட அத்வானி, 'ஹிந்துத்துவம்' என்று பேசினாலும் அவர்கள் அளவு தீவிரவாதியல்ல. எனவே, ஹிந்துக்கள் அல்லாதாரின் வோட்டுக்களைப் பெறவும் அத்வானியின் தலைமை உதவும் என்று அவர் கட்சிக்குள்ளேயே பலரும் கருதியதால்தான் அவர் தலைவராக்கப்பட்டுள்ளார். இதற்கேற்ப அத்வானியும், "இன்று அரசியலில் நிறைய மதம் இருக்கிறது. ஆனால் தர்மம் இல்லை. மதத்துடன் தர்மத்தை இணைத்தால் எல்லாம் சரியாகி விடும். இறையுணர்வு இல்லாத அரசியலால் ஆபத்துதான் அதிகம்" என்றெல்லாம் அழகாகப் பேசியுள்ளார்.

பாபர் மசூதி இடிக்கப்பட்ட போது மிகுந்த அதிர்ச்சியும் வருத்தமும் அடைந்து கண்கலங்கியவர் அத்வானி என்பதை மறக்கவோ மறுக்கவோ முடியாது. தாம் ஏமாற்றப்பட்டு விட்டதை வெளிப்படையாகவே சொன்னார். பின்னால் அவரே அரசியல் காரணங்களுக்காக ஏதேதோ பேசியபோதிலும் அவரது அந்த முதல் உணர்ச்சியே அத்வானியின் உண்மையான வெளிப்பாடு என்று கருதலாம். மத உணர்வுகளைப் புண்படுத்த விரும்பாமல் இன்று அவர் சமாளிக்கும் விதமாகப் பேசி வருகிறார். ஆனால் இது போதாது. பெரும்பான்மை ஹிந்துக்களின் வோட்டுக்களைப் பெற சிறுபான்மை முஸ்லிம்களைப் பகைத்துக் கொள்வது அவர் கட்சிக்கு மட்டுமல்ல; நாட்டுக்கே நல்லதல்ல. ஏன், பெரும்பான்மையினரான ஹிந்துக்களும் கூட ஏழைமை, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற எத்தனையோ கஷ்டங்களைச் சந்திக்க நேர்ந்தாலும் குறைந்தபட்சம் அண்டை அயலாருடன் அமைதியாக வாழவே விரும்புகிறார்கள். இதை உத்தேசித்தும், சிறுபான்மையினரின் நம்பிக்கையைப் பெறவும், அவர் பாஸிடிவ்வாக அனைவரது பாராட்டையும் பெறுவது போல், ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்தாக வேண்டும். என்ன காரியம் என்பதற்கு நூறு யோசனைகள் நாம் கூற முடியும். ஆனால் அதில் காலம் கடந்த யோசனைகள், அரசியல் நோக்கில் சாத்தியமே இல்லாத காரியங்கள் என்று பலவும் இருக்கும். எனவே என்ன காரியம் என்பதை அத்வானியின் முடிவுக்கே நாம் விட்டு விடுவதுதான் நல்லது. கூர்மதி படைத்த அவரால் அப்படிப்பட்ட ஒரு காரியத்தைத் தேர்ந்தெடுத்துச் செய்து காட்ட முடியும் என்ற அளவுக்கு நாம் அவரைத் தட்டிக் கொடுத்துத் தூண்டி விடலாம்.

பெங்களூர் மகாநாட்டை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு சென்னை வழியே தில்லி திரும்பிய அத்வானிக்கு இங்கு மலர்க் கிரீடம் சூட்டப்பட்டது. அவர் முகமும் மகிழ்ச்சியில் மலர்ந்தது. ஆனால் இதுவே பிரதமர் பதவிக் கிரீடமாக மாறும் போது முள் கிரீடமாகக் குத்தும்; வேதனை தரும்.

காங்கிரஸில் லஞ்ச ஊழல், பங்கு மார்க்கெட் ஊழல் என்றெல்லாம் நெகடிவ்வாகப் பேசி ஆட்சிக்கு வரலாமேயொழிய, அமைதியான நல்லாட்சியை வழங்க இவை உதவாது. இது அத்வானிக்குத் தெரியாதது அல்ல. தேசம் அவரிடமிருந்து ஒரு குறிப்பை – 'அப்பாடா' என்று நிம்மதிப் பெருமூச்சு விடச் செய்கின்ற ஒரு குறிப்பை – எதிர்பார்த்திருக்கிறது.



# எதை நினைக்கிறோமோ அதுவேதான் நடக்கிறது



'யெஸ், ரூபா ஜெகன் ஸ்பீக்கிங், ஒரு தபால் கார்டு போதும், உங்கள் முன்னேற்றத்திற்குப் பதினைந்து பைசா செலவிடத் தயாரா?' - இப்படியான கொட்டை எழுத்து விளம்பர வசனங்கள் அநேகமாக அத்தனை தமிழனுக்கும் பரிச்சயமானதாக இருக்கும்.

பத்தாங்கிளாஸ் பையனிலிருந்து பாட்டியாகவிருக்கும் மாமிகள் வரைக்கும் பல வயதினர் இந்த விளம்பரங்களைப் பார்த்து மாய்ந்து மாய்ந்து லெட்டர் போடுகிறார்கள். அவர்களுக்குப் பதில் எழுதுவதற்கென்று அந்நிறுவனம் தனியாக ஒரு கம்ப்யூட்டர் பிரிவையே இயக்குகிறது! ஒரு பல்கலைக் கழகத்தை விடவும் அதிகமான மாணவர்களைப் பெற்று, மிகக் குறுகிய காலத்தில் இமாலயப் புகழ் பெற்று விளங்கும் அந்நிறுவனம் 'விவேகானந்தா கல்வி நிலையம்.' செய்கிற செயல் எதுவாகினும் 'சிந்தனை ஒன்றுடையாராக இருந்து விடுகிற பட்சத்தில் வெற்றி நிச்சயம் என்பதற்கு இந்நிறுவனம் ஒரு எ.கா.

இன்றைக்கு தமிழகத்தின் (அநேகமாக) எல்லா மாவட்டங்களிலுமாக இரண்டு லட்சம் பேரைத் தனது மாணவர்களாகக் கொண்டு, மூச்சுவிட நேரமில்லாது உழைக்கும் 'விவேகானந்தா'வின் நிறுவனர் மற்றும் முதல்வர் வி. ராஜகோபாலன் சொல்கிறார் :

சின்ன வயதிலேயே ட்யூஷன் எடுக்கிற ஆர்வம் எனக்கு மிக அதிகம். காலேஜ் நாட்களில் என் தம்பியுடன் சேர்ந்து, லாக்நகர், கோட்டூர்புரம் போன்ற பகுதிகளில் உள்ள குடிசை வாழ் மக்களுக்கு இலவசமாகப் பாடம் எடுத்தோம். அந்த 'டேஸ்ட்' மிகவும் பிடித்துப் போக, 'பாடம் சொல்லிக் கொடுப்பதுதான் நம் வாழ்க்கை' என்று முடிவு செய்தேன். 1981 - ல் நந்தனத்தில் ஒரு வீட்டு மாடியில் 'விவேகானந்தா ட்யூஷன் சென்டர்' என்று ஆரம்பித்தேன். அந்த மாடி அறைக்கு மாத வாடகை நூற்றைம்பது

ரூபாய். அட்வான்ஸ் 500 ரூபாய்! அப்போது அதைக் கூட கொடுக்க முடியாத நிலை! என் தந்தை சின்ன வயதிலேயே காலமாகி விட்டதால், அம்மாதான் கஷ்டப்பட்டு குடும்பத்தை நடத்தி வந்தார். அவரிடம் கேட்டு எப்படியோ அந்த ஐந்நூறு ரூபாயைப் புரட்டி அட்வான்ஸ் கொடுத்து விட்டோம். மாத வாடகை? கிளாஸ் ஆரம்பித்தால் வர மாட்டார்களா என்கிற நம்பிக்கை! நாலே நாலு ஸ்டூடன்ட்ஸ்! இருந்தாலும் நம்பிக்கையுடன் ஆரம்பித்தோம்.

எனது ஒரே நோக்கம் - யாராலுமே சொல்லித் தர முடியாத அளவுக்கு ஆங்கிலத்தை எளிமையாக நடத்த வேண்டும் என்பது! என் முழுத் திறமையை அந்த நான்கு பேரிடம் காட்டினேன்!

விளைவு -

நான்கு நாற்பதானது! நாற்பது நானூறானது!

நந்தனம் வீடு போதவில்லை. தி.நகர் மேட்லி சாலையில் இடம் பிடித்தேன். வெறும் ட்யூஷன் சென்டராக ஆரம்பித்தது - இப்போது ஒரு டுடோரியல் காலேஜாக ஆகியிருக்கிறது!

ஆங்கிலத்தில் புலமை பெறுவது என்பது ஒவ்வொரு மனிதனின் ஆசையாக இருக்கிறது. அதுவே அவசியமாகவும் இருக்கிறது. வெறும் பள்ளிப் படிப்பு இதற்குப் போதுமானதாக இருப்பதில்லை. எனில், வேறு எந்த வகையில் இதை சாத்தியமாக்கலாம்?

இந்தச் சிந்தனையின் பின்னால்தான் விவேகானந்தாவின் வெற்றி ஒளிந்திருந்தது!

படிக்க விருப்பப்பட்டு வருகிறவர்களை இவர்கள் முதலில் மூன்று பிரிவாகப் பிரித்துக் கொள்கிறார்கள்..

1. ஏ, பி, ஸி, டி தெரியாதவர்கள்.

2. ஆங்கில இலக்கணம் தெரியாதவர்கள்

3. இலக்கணம் தெரிந்தும் சுலபமாகப் பேசத் திணறுகிறவர்கள்.

இப்படியாகப் பிரித்துக் கொண்டு பாடம் ஆரம்பித்தாலும் மூன்று பிரிவிலும் போதிக்கும் முறையில் நிச்சயமாய் 'எலிமென்ட்ரி எளிமை'யைக் கடை பிடிக்கிறார்கள். அன்றாட வாழ்க்கையில் நாம் சந்திக்க நேரும் 'சிச்சுவேஷன்'களை முன்கூட்டியே யோசித்து, இந்த மாதிரி இடங்களில் இந்த மாதிரி பேச வேண்டும் என்பதான எளிய பாடங்கள்! அநேக விளக்கங்கள், பரீட்சைகள், போட்டிகள்..... இவையே இவர்களது அணுகுமுறை!

தமிழ் மூலம் ஆங்கிலம் போதிப்பது 100% வெற்றி தர, தொடர்ந்து தெலுங்கு, ஹிந்தி, கன்னடம், மலையாளம் என்று மேலும் நான்கு மொழிகளில், ஆங்கிலம் பேசுவது எப்படி என்று கற்றுத் தருகிறார்கள்.

தபாலில் படிக்கிறவர்களுக்கு அவ்வப்போது ஏற்படும் சந்தேகங்களைத் தீர்க்க 'உங்களுக்காக', 'எளிய பயிற்சி' என்பது மாதிரியான இணைப்புப் புத்தகங்கள் - மற்றும் மாதா மாதம் தமிழகம் முழுவதுமுள்ள (மாணவர்கள் உள்ள) ஊர்களில் ஒரு நாள் செமினார், ஆடியோ கேஸட்டில் பாடங்கள்....

இத்தனை செய்தாலும் பாடங்களின் மூலம் மட்டுமே ஒரு மொழியில் புலமை வந்து விடுமா?

''வந்திருக்கிறதே'' என்கிறார் ராஜகோபாலன். அவர் காட்டிய சில கடிதங்கள் அதற்கு சாட்சி சொல்லின. கற்றுக் கொள்ளும் போதே ஏதோ சாதித்து விட்ட சந்தோஷத்தில் எழுதியவை, கற்றுக் கொண்டு நன்றி சொல்லி எழுதியவை; இப்படியாக.

ஆங்கிலப் பயிற்சி வகுப்புகள் மூலைக்கு ஒன்று முளைத்திருப்பினும் இன்று விவேகானந்தாவுக்குக் கிடைத்திருக்கிற பெயரும், பெரும் வெற்றியும் அத்தனையினின்றும் வித்தியாசப்பட்டு நிற்பதன் காரணம் என்ன?

ராஜகோபாலன் சொல்கிறார் : ''இதை 'சர்வீஸ்' என்றெல்லாம் நான் பெரிது படுத்தமாட்டேன். Service Activity எனலாம். ஆரம்பத்திலிருந்தே teaching தான் நம் வாழ்க்கை என்ற தீவிர உறுதியும், அதற்கு உதவும்படியான முயற்சிகளும், அறிவேயே ஆழ்ந்த, சிந்தனையும்தான் இந்த வெற்றியைச் சாத்தியமாக்கியிருக்கின்றன.''

விவேகானந்தர் மட்டுமல்ல; அவருக்கு வழி காட்டின உபநிடதமும் இதைத்தான் சொல்கிறது.

'நீ எதை நினைக்கிறாயோ, அதனையே அடைகிறாய், அதுவாகவே ஆகிறாய்!'

– பா.ரா.

படம் : கோபிநாத்

## அடுத்த இதழில்.....

●● அத்வானி : அடுத்த பிரதமர்?

– கவர் ஸ்டோரி



# க்ளைமாக்ஸ் காட்சி எப்போது!?

● சி. சீனிவாசன், திருத்துறைப்பூண்டி.

? நடிகை ஜெ; கொ.ப.செ. ஜெ, முதல்வர் ஜெ... - ஒப்பிடுக.

! நில், கவனி, வெற்றி கொள்!

● பால கிருஷ்ணமூர்த்தி, மருங்கூர்.

? அரசியல்வாதிகளை மெஸ்மரிஸ சக்தியால் கட்டுப்படுத்தி, நல்லதை மட்டுமே செய்ய வேண்டும் எனச் செய்து விட்டால் நாடு முன்னேறுமா?

! ஊஹூம். அப்படிச் செய்யப் போனால் மெஸ்மரிஸ சக்தி உள்ளவரிடம் நாட்டின் தலைவிதியை ஒப்படைத்ததாகும். நல்லது எது, கெட்டது எது என்று நிர்ணயிக்கும் முழுமையான அதிகாரம் அவர் கைக்குப் போய் விடும். அது ஆபத்தானது.

● லீலா இராம், தக்கலை.

? கடந்த முப்பது ஆண்டுகளில் இந்தியாவில் சாலை விபத்துக்கள் பத்து மடங்காகப் பெருகியிருக்கிறதாமே?

! அதில் ஆச்சர்யமென்ன? வாகனங்கள் அதிகரித்த அளவுக்கு சாலை வசதிகள் அதிகரிக்கவில்லை. வாகன ஓட்டிகள் அதிகரித்த அளவில் சாலைப் பிரக்ஞை - சாலை விதிகளைப் பற்றிய அறிவும் கட்டுப்பாடும் - அதிகரிக்கவில்லை. விளைவு - விபத்துக்கள்.



✱ கொடைக்கானலில்

● ஈ.டி. விஜய குமார், ஈரோடு.

? கட் அவுட்களுக்குப் பால் அபிஷேகம் செய்யப்படுவது சாதனைதானே?

! கட் அவுட் உயரத்துக்குப் பால் விலை உயர்ந்து விட்டதும் சாதனைதான்!

● எம். பிரபு, குமராட்சி.

? ஊட்டியில் கவர்வர்; கொடைக்கானலில் முதல்வர் - இது பற்றி?

! மக்கள் மனம் குளிர்ந்து விட்டது!

✱ ஊட்டியில்

● ப. வெங்கட், வலங்கைமான்.

? விம்பிள்டன் போட்டியை நேரடியாக ஒளி பரப்ப தூர்தர்ஷன் உரிமம் வாங்கியிருப்பது பற்றி...?

! ஆமாம், சென்ற முறை கிரிக்கெட் டெஸ்ட்டை ஒளிபரப்ப வேறொரு நிறுவனத்திடம் கெஞ்சி நிற்க வேண்டிய நிலை. அது நினைவு வந்திருக்கும். இப்போதாவது முந்திக் கொள்ளலாம் என்று...

● ர. சுகுமார், காட்டுக்கானூர்.

? நகர்வாலா, போஃபர்ஸ், ஹர்ஷத் மேத்தா போன்ற கதைகளுக்கெல்லாம் முடிவே இல்லையதா?

! உண்டு; பதவி ஆசை - தேர்தல் செலவு - பணத்தாசை இவற்றுக்கு முடிவு ஏற்படும் போது.

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'கோயில் நிர்வாகத்தில் முறைகேடு செய்பவர் என் தம்பியாக இருந்தாலும் விட மாட்டேன்' என அமைச்சர் நடேசன் பால்ராஜ் கூறுகிறாரே?

! ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்கள் கவனத்தில் கொண்டால் நல்லது.

● கே. ரமேஷ், பள்ளிபாளையம்.

? சுப்பிரமணியசுவாமியைப் பொதுக் கூட்டத்தில் பேச மக்கள் அனுமதிப்பதில்லையே?

! மக்களா, ஆளும் கட்சி அடியாட்களா?

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சை.

? அரசியல் கட்சி சார்பு இல்லாமல், சினிமா, ஆபாசக் கவர்ச்சி போன்றவற்றை நம்பியிராமல், பரபரப்புப் பொய்கள் இல்லாமல் இக் காலத்தில் உங்களால் எப்படி பத்திரிகை நடத்த முடிகிறது?



✱ தம்பியாக இருந்தாலும்.

! கே. ஆர். உபேந்திரன் போன்ற தரமான வாசகர்களை நம்பித்தான்.

● வாசுதேவன், பம்பாய். ❒

? இந்த சம்மரை எப்படிக் கழித்தீர்கள்?

! என்னங்க, தண்ணி லாரி சத்தம் காதுல விழலியா? என்னமோ எழுதிக்கிட்டு உக்காந்திருக்கீங்க? வேகமா வாங்களேன்! நாலு குடம் தயாரா வைச்சிருக்கேன்ல. கியூ நீண்டு போயிடும். சீக்கிரம்! சீக்கிரம்!

● பாக்கியமுத்து, திருச்சி.

? விளையாட்டைப் பற்றித் தெரியாமலேயே விளையாட்டு வீரர் கோட்டாவில் சிலர் சேர்க்கப்படுவது பற்றி...?

! என்ன அப்படி சொல்லிட்டீங்க? ஊழல் விளையாட்டுல அவங்களுக்கு எக்கச்சக்கமா திறமை இருப்பதால்தானே சேர முடியுது?

● உமாபதி, காரை.

? 'ஜெயலலிதா ஆட்சியைக் கவிழ்க்கும் வரை உறங்க மாட்டேன்' என்று சுப்பிரமணிய சுவாமி கூறியிருப்பது பற்றி?

! கட்சிக்குள் இவர் செல்வாக்கே கவிழ்ந்து கொண்டிருக்கிறது. அதற்காகவும் சேர்த்து விழிப்புடன் இருக்கலாம்!

● பாக்கியமுத்து, திருச்சி.

? க்ளைமாக்ஸ் காட்சி எப்போது?

! லோக்கலா? சென்ட்ரலா? டில்லியின் 'டெம்போ'வைப் பார்க்க, லோக்கல் ரொம்ப நாளைக்கு 'இழுக்கும்' போலிருக்கிறதே!

● எஸ். கோகிலா, மதுரை.

? கரியப்பா பற்றி 30.5.93 இதழில் எழுதியிருந்தீர்கள். அவர் மகனைப் போர்க் கைதியாக வைத்திருந்ததாகக் கூறியிருந்தீர்கள். இன்னமும் அவர் கைதியாகத்தான் உள்ளாரா?

! கரியப்பாவின் மகன் இந்தியா - பாக் போரின் போது விமானப் படையில் பணி புரிந்தார். அவர் அப்போது ஸ்குவார்டன் லீடர். அவர் விமானத்தைச் சுட்டு வீழ்த்திய பாகிஸ்தான் ராணுவம் அவரையும் கைது செய்தது.

போர் முடிந்த பிறகு இந்திய - பாகிஸ்தானிய போர்க் கைதிகளைப் பரிவர்த்தனை செய்து கொண்ட போது கரியப்பாவின் மகன் இந்தியாவுக்குத் திரும்பினார். ஆனால் அதற்கு முன்பாக நல்லெண்ணத் தூதராக பாகிஸ்தானுக்கு விஜயம் செய்த கரியப்பா, தமது மகனின் விடுதலையைக் கோர



* மலரக் கருத்துக்கள்



* உயர்ந்த பண்பு



* ''கவிழ்க்கும் வரை...''

வில்லை என்பது, அவர் உயர்ந்த பண்பாட்டை அடிக்கோடிட்டுக் காட்டும். கரியப்பாவின் மேற்படி மகன் கே. ஸி. கரியப்பா, தற்போது ஏர்-வைஸ்-மார்ஷல். அவர் தான் தமது தகப்பனாருக்கு அந்திமச் சடங்குகள் செய்தார்.

● ஏ. முருகன், கம்பம்.

? தற்போது தாங்கள் படித்து வரும் புத்தகம்?

! பாரதிய வித்யா பவன், சுய ராஜ்யாவில் ராஜாஜி ''டியர் ரீடர்'' என்ற தலைப்பில் எழுதி வந்த சிறு குறிப்புக்களைத் தொகுத்து நூல் வடிவம் தந்துள்ளது. கட்டுரை வடிவில் அல்லாமல், அவ்வப்போது பல்வேறு நிகழ்ச்சிகள் தொடர்பான தமது கருத்துக்களை ராஜாஜி வாசகர்களுடன் பகிர்ந்து கொண்டார் - 'என்ன சேதி?' என்று கேட்கிற அணுகுமுறையில். அவற்றை அழகாகத் தேர்ந்தெடுத்து 'எடிட்' செய்து பொருளாதாரம், தேசிய பிரச்னைகள், ஜனநாயக அமைப்பு என்பது போன்ற பல்வேறு தலைப்புகளில் தொகுத்துத் தருகிறது இந்த நூல். ராஜாஜியின் கருத்து ஒவ்வொன்றும் ஒரு வைரம் எனில், அவர் நடை வண்ண ஜாலம் மிக்க அதன் ஒளிச் சிதறல். தங்கச் சரட்டில் பதித்த அட்டிகை போல் அளித்திருக்கும் தொகுப்பாசிரியர் அற்புதக் கலைஞர்.

❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
வாசுதேவன்,
4, Sarvana Naughr Road,
Mulund (E), Bombay - 81.

## வட்டமேஜை

◆ வீரப்பனைப் பிடிக்க மோகன்தாஸ் கோரும் இருகண்டிஷன்களில் இருந்தே, இன்னமும் வீரப்பன் பிடிபடாமல் இருப்பதற்கான காரணங்கள் என்னவென்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது!

கொளவட்டம்,
கே. ஆர். தேவேந்திரன்.

◆ 'புட்டபர்த்தி மர்மங்கள்' தலையங்கம் கண்டேன். நான்கு குற்றவாளிகளையும் உயிரோடு பிடிக்காமல், சுட்டுக் கொன்றது தான் இன்றைய துரித விசாரணைக்குத் தடையாக இருக்கிறது என்பதையும் சுட்டிக் காட்டியிருக்கலாம். பாபாவின் புகழுக்கும், பெருமைக்கும் இது ஒரு நீங்காத களங்கமே!

கொங்கவல்லி, பூங்குழலி.

◆ புட்டபர்த்தி மர்மங்களை டி.கே.சி.யுடனும், கல்கியுடனும் ஒப்பிட்டுச் சிந்திக்க வைத்த விதம் அருமை. சாயிபாபா அமைதியைத் தவிர்த்து, தம் கருத்தை நன்கு கூறினால்தான் புட்டபர்த்தி மர்மம் வெளியாகும். நம் எதிர்பார்ப்பை வீணடிக்க மாட்டார் பாபா! அறமும், அன்பும் ஜெயித்து நிலைநாட்ட வேண்டுமென்றால் அது பாபாவின் கையில்தான் இருக்கிறது. புட்டபர்த்தி மர்மத்திற்கு விடுதலை தர முன்வருவாரா பாபா...?

திருச்சி - 8,
தி. மா. தமிழமுகன்

◆ கொஞ்சம் ஆளை விட்டால் "புதிய முகம்" படத்திற்குத் தனி சிறப்பிதழே வெளியிட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே!

மதுரை - 10, ஆர். லட்சுமி.

◆ ஊழலற்ற மனிதர்களின் நாட்டைப் பற்றிய விவரங்களைப் படித்த போது உள்ளம் சிலிர்த்தது. இப்படிப்பட்ட மனிதர்களும் இருக்கிறார்களே என்று வியப்பாக இருக்கிறது. ம்... இங்கேயும்




## தெளிவாக விளங்கும் காரணங்கள்!

தான் இருக்கிறார்கள் மனிதர்கள்!

பாண்டிச்சேரி,
தா. செல்வராசன்.

◆ கன்னடத்துப் பைங்கிளி திருமதி பி. சரோஜா தேவியின் பேட்டி படித்தேன். தற்கால திரைப்பட நிலையை மிக அழகாக விளக்கி உள்ளார். தமிழ், கன்னடம், தெலுங்கு, இப்படி எந்த மொழித் திரைப்படத்திற்கும் அவர் சொன்ன கருத்து மிகச் சரியாகப் பொருந்துகிறது. எங்களைப் போன்ற ரசிகர்களின் மனத்தில் உள்ளதை அவருடைய பேட்டி பிரதிபலிக்கிறது. அந்த பேட்டியினைப் படிக்கும் போது அவருடன் நேரில் சந்தித்து உரையாடியதைப் போன்ற மனநிறைவைத் தந்தது.

கரூர்,ஏ. வெங்கடேஸ்வரன்.

◆ 'பெண்கள் கால்பந்தாட்டத்துக்கு ஆதரவு கொடுங்கள்' கட்டுரை மனத்தில் வேதனையை உண்டு பண்ணியது. விளையாட்டுத் துறையில் கூட அவர்களுக்குச் சம உரிமை அளிக்காத நம் சமூகத்தையும் அரசையும் நினைத்து வேதனைப்படாமல் வேறென்ன செய்வது? பல நூறு கோடி செலவில் விளையாட்டு ஸ்டேடியங்களைத் தயார் செய்யும் நாம், விளையாட்டு வீரர்களைத் தயார் செய்வதில் மட்டும் கோட்டை விட்டு விடுகின்றோம். அதனாலென்ன, அரசியல் நிகழ்ச்சிகளுக்கு ஸ்டேடியத்தைப் பயன்படுத்தித் தமிழகம் ஒரு புதிய சாதனை படைத்து வருகின்றதே!

நாகை,
பால. கிருஷ்ணமூர்த்தி.

◆ பழகும் முறையிலேயே பாதி வெற்றி கண்ட ஓவியர் ஸ்யாமினுடைய வாழ்வின் தொடக்க காலப் போராட்டங்கள், 'ஒவ்வொரு மனிதனும் நம்பிக்கையுடன் போராடினால் வெற்றி பெறலாம்' என்பதை உணர வைத்தன.

மதுரை - 14,
'இளவல்' ஹரிஹரன்.

◆ தமிழன்பன் காட்டியது மாணவர்கள் நடத்திய மாதிரி சட்டசபைதானா? அல்லது நிதர்சனமா?

சென்னை - 14,
ஐயாறு எஸ். வாசுதேவன்.

◆ ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு முகங்கள் உண்டு என்பதை அழகாகச் சொல்லிற்று பா. ராகவனின் "கே.வி.ஆர். என்றொரு நண்பர்" என்ற சிறுகதை. என் இனிய பாராட்டுக்கள்.

திருச்சி, சரசுவதி பஞ்சு.

◆ 'ஜாமீன்' என்ற பெயரில் திருவாரூர் பாபு எங்கள் கதையையே எழுதி விட்டாரோ என்று நானும் என் கணவரும் மலைத்துப் போனோம். மனிதன்தான் பணத்தைச் சம்பாதிக்கிறான் என்றும் அடுத்தவரை நம்ப வேண்டும் என்றும் கொள்கை உடைய நாங்கள் இருவரும் 5000 ரூபாய் வரை ஏமாந்திருக்கிறோம். உலகில் நல்லவராய் இருப்பது தான் எவ்வளவு கஷ்டம்!

திருச்சி - 21,
இந்திரா பத்மநாபன்.

# INSTANT LOANS

RPS Benifit fund
offers you instant loans
on gold jewellery.
Loans of Rs.300 per gram
of gold is offered instantly.




## RPS BENEFIT FUND LTD

Vijay Shanthi Complex,
First Floor, No. 16,
Ramanathan Street, T. Nagar,
Madras - 17. Ph: 441554

# ஐ லைக் இட்!




TAS Vision ● 026

**yankee doodle**
ice creams

For Details Contact:
**SRI VENKATADRI ENTERPRISES**
Flat 14, 250, Lloyds Road, Madras-86. Ph: 8278807

AKSHAR RPS/930/93

புராண கேள்வி-பதில்

தேவியின் கேள்வி : பெருமானே! உன் உண்மை என்ன? வித்தையான பிரபஞ்சம் என்பது என்ன? இதன் விதையென்ன? மையமென்ன? உருவத்துக்கும் அப்பாற்பட்ட உயிர் என்பது என்ன? உருவத்துள் ஊடுருவும் உயிர் என்பது என்ன? அதனுள் நுழைவதெப்படி? காலம், தூரம், பெயர் வர்ணனை இவைகளைக் கடப்பதெப்படி?

சிவனின் பதில் : அந்த அனுபவம் உன் மேல் மூச்சுக்கும், கீழ் மூச்சுக்கும் இடையே தோன்றலாம். இரண்டு மூச்சுக்களின் இடையில், ஒரு கணத்தில், சக்தியற்ற, சக்தி நிரம்பிய மையத்தைத் தொட முயற்சி செய். தேவி! எழுத்துக்களாகப் பார். அவைகளை அப்புறம் சப்த ரூபங்களாகப் பார். தலையில் இருக்கும் ஏழு வாசல்களையும் கைகளால் மூடிக் கொண்டு, கண்களுக்கு இடையே இருக்கும் வெளியில் எல்லா பிரபஞ்சமும் அடங்கி விடுவதைப் பார்.

*எச்சரிக்கை!*

*எட்டு வாரங்களே உலக*

*வாழ்க்கை! ராமச்சந்திரா!*

*கல்யாணத் தேதியை ஒத்திப்*

*போடாதே!*

குரு ஒரு முடிவுக்கு வரும்,

அத்யம் – ஈ

ஈரமான காலை. அந்தக் கார் சப்தம் போடாமல் வழுக்கி வந்து கேட்டின் முன் பிரேக்கியது. முன்புற விளக்குகள் மூன்று முறை எரிந்தணைந்தன. உடனே எலக்ட்ரானிக் கேட் தானாய் நகர்ந்தது. திறந்தது. காரிலிருந்து இறங்கினாள் மின்னி. பரிசுப் பொட்டலத்தை எடுத்துக் கொண்டாள். கதவருகில் சென்று தன் அடையாள காந்த அட்டையைச் செருக, மணிக்கதவு தான் திறந்தது.

''சோட்டி! ஏய்ச்சோட்டி...'' - ஹாலில்.

பதிலில்லை.

''சோட்டி... சோட்டி'' - முதல் அறையில்.

பதிலில்லை.

''சோட்டி....'' - இரண்டாம் அறைக்குள்.

பதிலில்லை.

''சோட்டி... சோட்டி'' - மூன்றாம் அறைக்குள்.

பதிலில்லை.

''சோட்டி'' - திரும்ப ஹாலில்.

பதிலில்லை.

எங்கே போயிருப்பாள்?

எட்டு மணிக்கு வரச் சொன்னாளே?

இதுவரை நேரம் தவறினதில்லை.

ஒருவேளை அவசரமா லேபுக்குப் போயிருப்பாளோ?

வி.வி. பட்டன்களைத் தட்ட, திரையில் ப்ரொஃபஸர் ஆர்யா சிரித்தார்.

''மெனி ஹேப்பி ரிடர்ன்ஸ் ஆஃப் த... ஓ நீ சோட்டியில்லையா?''

''இல்ல சார், நான் மின்னி. சோட்டிய வீட்ல காணோம். அங்க வந்தாளா?''

''இல்லையே... இன்னக்கி லீவ் போடறதாச் சொன்னா...''

''சார் பயமாருக்கு. அவ கார் இருக்கு. செருப்பு இருக்கு. ஹேண்ட் பேக் இருக்கு. அவ வாசனை இருக்கு. அவளை மட்டும் காணோம்.''

ஏறத்தாழ மதியம் வரை பொறுத்து, பொறுக்காமல் குற்றப் பிரிவை அழைத்தாள் மின்னி. ஐந்து நிமிடம் முடிவதற்குள் குற்றப்பிரிவு தன் ஆயிரம் கண்களுடன் வந்தது. யானைக் கண்கள்.

''உங்கள் பெயர்?''

''மின்னி.''

''அழைத்தது?''

''நான்தான். இன்று சோட்டியின் பிறந்த நாள். காலை பூரா ப்ரோகிராம் போட்டிருந்தோம். ஆனால் அவளைக் காணவில்லை. என்ன ஆனாளோ என்று பயமாய் உள்ளது.''

# ஆத்மாவுக்கு ஆபத்து

''காணவில்லையா? தெரிந்தவர் வீட்டுக்குப் போயிருக்கலாம். இதற்காக எங்கள் பொன்னான நேரத்தை வீணாக்கி விட்டீர்கள்.

''நோ சார்! சோட்டி காணாமதான் போயிட்டா.''

''எப்படிச் சொல்கிறீர்கள்?''

''அவ கார் இருக்கு.''

''யாருடனாவது சென்றிருக்கலாம்.''

''அவ ஹேண்ட் பேக் இருக்கு.''

''அவசரத்தில் போயிருக்கலாம்.''

''அவசரத்தில் அடையாள அட்டை கூடவா மறப்பாள்?''

''யோசிக்க வேண்டிய விஷயம்.''

''எவ்வளவு அவசரமாப் போனாலும், போகுமிடத்தை விவி மெம்மரில சொல்லாம போக மாட்டாள். ஏதோ நடந்திருக்கு.''

உடனே போஃபிஸர் முழு ஆய்வுக்குக் கட்டளை தர இரண்டு பேர் கடிதில் இறங்கினர்.

''மின்னி... உங்க பிரண்ட் சோட்டி பற்றிச் சொல்கிறீர்களா?''

''அவ பெற்றோர் இறுதி இல்லத்துல இருக்காங்க. சோட்டி மட்டும் இங்கே தனியாத்தான் இருக்கா. சைக்காலஜில பைத்தியம். ஏதோ ஆராய்ச்சி பண்றா. ரொம்ப புத்திசாலி. முதன்மைப் பிரஜை.''

''சோட்டி எத்தனை நாளா பழக்கம்?''

''ஐந்து வருடப் பழக்கம். என்னைத் தவிர நெருங்கின தோழிகள் கிடையாது. விரோதிகளும் கிடையாது. தனியான பெண். தங்கமான பெண்.''

அவர்கள் ஏறத்தாழ வீடு முழுதும் லேஸர் கேமராவின் கண்ணைச் சிமிட்டினார்கள். உடனே உடனே ரேகைகள் பிரிண்டாகி போட்டோக்களாக வெளியே வந்து கொண்டேயிருந்தன.

''காதல் விவகாரம்... ஏதும்...''

''அதிலெல்லாம் ஆர்வம் இல்லாதவள். ஆராய்ச்சியே பழியாய்க் கிடப்பவள். என்னுடன் கூட அதிக நேரம் செலவிட தயங்குவான்.''



அந்த டைனிங் டேபிளில் இரண்டு பேர் சாப்பிட்ட அடையாளங்கள் இருந்தன.

யார் அது?

ப்ரொஃபஸர் ஆர்யாவா?

அந்த பீரோவின் அறைகள் கலைந்து, கன்னாரே பின்னாரேயென்று கிடந்தது. யாரோ தேடியிருக்கிறார்கள்.

என்ன? என்ன?

யார்? யார்?

இப்போதுதான் அந்தப் பேப்பர் கண்ணில் பட்டது. அவசர கிறுக்கல். அதில் சில எழுத்துக்கள்.

''ஜுலா அழைக்கிறாள்.''

ஜுலாவா? என்ன ஜுலா?

வாட் ஈஸ் ஜுலா?

''மிஸ் மின்னி. ஆர்யா எப்படி?''

''நைஸ் ஜென்டில்மென்.''

''கல்யாணம் ஆனவர்?''

''விடோயர்.''

''ஆமாம் ஜுலா யார்?''

''ஜுலா?''



''வீடு, கடல் மாதிரி இருக்கும்னு சொன்னீங்க; இப்படி குகை மாதிரி இருக்கே?''

''ஹி.... ஹி... நான் சொன்னது, மழை காலத்துல....!''

– சீர்காழி வி. ரேவதி.

''யெஸ்.''

''நோ ஐடியா.''

''சோட்டி பிரெண்ட்ஸ்... யாராவது?''

''எனக்குத் தெரிந்து யாரும் கிடையாது.''

''ஓ.கே. உங்களைப் பிறகு சந்திக்கிறோம்.''

''தேங்க்யூ சார்! உதவத் தயாராக இருக்கிறேன்.''

**ச**ண்டைக்கான தடயமில்லை. பலாத்காரமில்லை. திருட்டுக்கான சாத்தியம். மக்கள் தீர்ப்புத் தெரிந்தும் திருட்டா? திருட்டில் சோட்டி எங்கே போனாள்?

கொலையா?

எனில் உடல் எங்கே?

ஜுலா யார்?

போஃபிஸர் சோட்டியின் அயலாரிடம் விசாரணை திருப்பினார்.

''இந்த வீட்ல சோட்டின்னு ஒரு பெண். அதப் பத்தி ஏதாவது தெரியுமா?''

''தங்கமான பெண்!'' - இந்தப் பக்க வீட்டுக்காரர்.

''பிளாட்டினமான பெண்!'' - அந்தப் பக்க வீட்டுக்காரர்.

''வம்பு தும்புக்குப் போகாது...'' இ.ப.வீ.

''இருக்கற இடம் தெரியாது...'' அ.ப.வீ.

''நேற்று யாரும் வரல...'' இ.ப.வீ.

''நேற்று நாங்க ஊர்ல இல்ல..'' அ.ப.வீ.

''புதுசா ஏதும் தெரிஞ்சாச் சொல்றோம்.'' இ.ப.வீ. அ.ப.வீ.

**அ**ந்த அதிகாரி கைரேகை போட்டோக்களை அந்த கம்ப்யூட்டரில் செருகி சில பட்டன்களுடன் பேசினார். ரேகைகள் உடனே மத்திய குற்ற இயல் கம்ப்யூட்டரில் மின்னியது. உலக மக்கள் அனைவரின் ரேகைகளும் அதன் ஞாபக அடுக்கில் பதிந்திருந்தன. வந்த ரேகைகளைக் கம்ப்யூட்டர் தன் ஞாபகத்தோடு சுற்றித் தேடியது. விவரங்களை பிரிண்ட் செய்து துப்பியது.

01XX ரேகை
பிறப்பு எண் : 1011011.எம்.எல்.
பெயர் : சோட்டி
முகவரி : X12YM. ZEL

10XX ரேகை
பிறப்பு எண் : 1001111 ஒய். எல்.
பெயர் : மின்னி
முகவரி : Y0013IN. ZEL

11XX ரேகை
பிறப்பு எண் : 11010101 கே.ஈ.
பெயர் : ஆர்யா
முகவரி : L10001N ZEL

100XX ரேகை
பெயர் : தெரியவில்லை.
பிறப்பு எண் : தெரியவில்லை
முகவரி : தெரியவில்லை.

உடனே, உடனே வந்த ரேகை விவரங்களைப் பார்த்த அதிகாரி திகைத்தார். நாலாவதாக உள்ள ரேகை - பெயரில்லாமல் - ஊரில்லாமல்...

இது எப்படி சாத்தியம்?

ஆத்மா கண்ணயர்ந்து விட்டதா? இருக்காதே! சரி இருக்கட்டும், பிறகு பார்க்கலாம். முதலில் ஆர்யாவை கவனி.

L1000IN முன்பாக கார் நின்றது. ஆர்யா சோகமாக அமர்ந்திருந்தார்.

''குட் ஈவ்.'' ஆர்யா

''குட் ஈவ்.'' போலீஸ் ஆபிஸர்.

''ஏதும் உதவி தேவையா?''

''உங்க ஸ்டூடண்ட் சோட்டி...''

''யெஸ் சார். அவளைக் காணவில்லையாமே!''

''எப்படித் தெரியும்?''

''மின்னி சொன்னா. இங்க வந்தாளான்னு விசாரிச்சா.''

''ஆமா... நீங்க கடைசியா சோட்டிய எப்ப பாத்தீங்க?''

''நேத்து மத்யானம். டெலிகான்பரன்ஸுக்கு முன். இன்று அவள் பார்த்டே. கட்டாயம் வரச் சொல்லியிருந்தா.''

''அவளப் பத்தி ஒரு பேரகிராப் சொல்ல முடியுமா?''

''ரெண்டு பேராவே சொல்றேன். துடிப்பான பெண். புத்திசாலி மூளையில் கம்ப்யூட்டர். சைக்காலஜில நிறைய டிகிரி. இப்ப 'ப்ராஜக்ட் ப்ரெயின்' வொர்க் பண்றோம். வயதானவர்களின் புத்திசாலித்தனம் பத்தி ஆராய்ச்சி பண்றா.''

''சோட்டி வெளியூர் போயிருப்பாளா?''

''நோ சான்ஸ். சாயந்திரம் கூட கான்பிரன்ஸ் முடிந்து வந்ததும் அவகிட்ட சில குறிப்புகள் சொன்னேனே!''

''மதியம்தான் பார்த்ததா முன்பு சொன்னீர்கள்?''

''சாரி, ஞாபக மறதி. சாயந்திரம் வி.விலே பேசினேன். அப்ப கூட யாரோ வயசான ஆசாமி உடன் இருந்ததா ஞாபகம்.''

''ஆர்யா நன்கு யோசித்துச் சொல்லுங்க. அது யார் தெரியுமா?''

டைனிங் டேபிளில் இருவர் சாப்பிட்ட அடையாளம் சரிதான். உடன் சாப்பிட்ட அவன் யார்? அவன்தான் ஜுவாலாவா. ஜுவாலா அழைக்கிறாள். அவன். அவன் அவவில்லை.

''தெரியாது. வயதானவர்களைச் சோட்டி அடிக்கடி ஆராய்ச்சி விஷயமா சந்திப்பா. அதில ஒருத்தர்னு நெனைச்சேன்.''

''அடையாளம் சொல்ல முடியுமா?''

''சாரி... நினைவில்லை.''

''உங்கள் ஞாபக மறதிக்குப் பாராட்டு. ஆமா ஏன் நீங்க சோட்டி பிறந்த நாளுக்குப் போகலை?''

''காத்தால போனேனே... அவ இல்ல.''

''காலைல போனீங்களா? ஏன் முதல்லயே சொல்லலை.''

''சாரி... ஞாபக மறதி. போனேன். அவள் வீட்டிலில்லை. சரி, எங்காவது பிரண்ட் வீட்டுக்குப் போயிருப்பாள்னு திரும்பிட்டேன்.''

''ஜுவாலாவைத் தெரியுமா புரொபஸர் சார்?''

''எனக்கு கோகாகோலாவைத்தான் தெரியும்.''

இந்த ஆர்யா உளறுகிறார். ஞாபக மறதி. விடோயர். முரணான பேச்சு. இவரைத் தனியாக கவனிக்கணும். ஆசாமிக்குக் குயுக்தி மூளை. ஒருவேளை கொன்று புதைத்து விட்டாரோ? இந்த அதி புத்திகளை நம்பக் கூடாது. மூளை விபரீதமாகச் செயல்படும். ஆர்யா பற்றி விசேஷ விசாரணைக்கு ஏற்பாடு செய்யணும்.

இது என்ன கேஸ்?

தொலைதலா? கடத்தலா?

கொலையா? தற்கொலையா?

கேஸா? கேஸ் இல்லையா?

திடீரென்று சோட்டி வந்தால் ஒன்றுமில்லாமல் போய் விடும்.



''நேத்து வந்த திருடன் எங்களை மிரட்டினப்ப குழந்தைங்க கை தட்ட ஆரம்பிச்சுட்டாங்க!''

''ஏன்?''

''மிரட்டுறப்ப கமல் மாதிரி, ரஜினி மாதிரி குரல மாத்தி மாத்திப் பேசினான்!''

- அம்பை தேவா.

வருவாளா?

ஜுவாலா யார்?

வாயேன்.

ஸ்ரீநிவாஸ குரு ஏராளமான ஆவுடன் வான டாக்ஸியில் ஏறிப் பக்கத்து நகருக்குப் பறந்த வேளையில், அந்த விபரீத எண்ணம் உருவாயிற்று.

இன்னொரு முறை பரிசோதித்துப் பார்க்கலாமா?

முடியுமா?

அதான் முடிந்ததே!

திரும்பவும் முடியலாம்.

முடியும்.

குரு முடிவுக்கு வந்தான்.

(தொடரும்)

இப்போதைய அமைச்சரவையில் வெற்றிலைப் பெட்டியும் கையுமாக இருக்கும் அமைச்சர் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் நடேசன் பால்ராஜாகத்தான் இருப்பார். நெல்லையப்பர் கோயிலிலும் மற்ற சில கோயில்களிலும் திடீர்ச் சோதனைகள் நடத்தி, முறைகேடுகளைக் கண்டுபிடித்து விட்டுச் சென்னை வந்திருந்த அவரை, அரசு விருந்தினர் மாளிகையில் சந்தித்த போது, சுற்றிலும் தொண்டர்கள் கூட்டம். தலைமாட்டுக்கருகிலேயே ஜெயலலிதா படம். ''கொஞ்சம் இருங்கள்'' என்று வாயைக் கொப்புளித்து விட்டு வந்து பேசினார்...

''இந்து சமய அறநிலையத் துறைக்கு உங்களைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?''

''அம்மாவுக்கு என் மேல் இருக்கும் நம்பிக்கை என்று சொல்வதைத் தவிர, வேறு என்ன சொல்வதென்று தெரியவில்லை...''

''ஜெயலலிதாவிடம் அந்த அளவுக்கு உங்கள் மேல் நம்பிக்கை வருவதற்கான காரணத்தைத்தான் கேட்கிறோம்...''

# ''நாத்திகவாதம் கடவுள் பயத்தைப் போக்கி விட்டது!''

- அறநிலையத் துறை அமைச்சர்

''எனக்குச் சிறு வயதிலிருந்தே கடவுள் பக்தி உண்டு. இப்போது நான் அணிந்திருக்கும் நீருநீறும் குங்குமமும் சிறு வயதிலிருந்தே நான் வைத்துக் கொண்டிருப்பது தானே தவிர, அறநிலையத் துறை அமைச்சரான பிறகு அல்ல. அதோடு, நெல்லை மாவட்ட அறங்காவலர் குழுவில் நான் பணியாற்றிய



**"ஒரு குடும்பத்திலுள்ள பிள்ளைகள், தாங்கள் எடுக்கும் முடிவுகள் பற்றிப் பெற்றோரிடம் ஆலோசனை கேட்பதில்லையா? அப்படிக் கேட்பது பிள்ளைகளின் சுதந்திர உணர்வைப் பாதிக்கிற விஷயம் என்று யாராவது சொல்வார்களா? அது போல்தான் நாங்கள் அம்மாவின் கருத்தை அறிந்து செயல்படுகிறோம்."**

விதத்தைக் கண்டு அம்மாவுக்கு என் பணிகளின் மேல் நம்பிக்கை வந்திருக்குமென்று கருதுகிறேன்."

"இந்த அமைச்சர் பதவி நீங்கள் எதிர்பார்த்ததா அல்லது எதிர்பாராததா?"

"நான் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. நான் அமைச்சராக்கப்பட்ட விஷயத்தைச் சொன்ன போது, முதலில் நான் நம்பக்கூட இல்லை."

"அமைச்சர் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு, ஜெயலலிதா உங்களிடம் என்ன சொன்னார்?"

"பொறுப்பாகச் செயல்பட வேண்டும்' என்று அறிவுரை கூறினார். 'உங்களுடைய நம்பிக்கையை முழுமையாகக் காப்பாற்றுவேன்' என்று நானும் உறுதி கூறினேன்."

"நீங்கள் நெல்லையப்பர் கோயிலுக்கு முதல் முறை சென்ற போது கோயில் நிர்வாகக் கணக்குகளைச் சோதிக்கவில்லை. இரண்டாவது முறை சென்றுதான் சோதனை செய்தீர்கள். அதற்கு என்ன காரணம்?"

"முதல் முறை நான் ஒரு சாதாரண பக்தனாக இறைவனைத் தரிசனம் செய்வதற்குத்தான் சென்றேன். இரண்டாவது முறைதான் இந்து சமய அறநிலையத் துறையின் அமைச்சராகச் சென்றேன். அதனால்தான் இரண்டாவது முறை சென்ற போது சோதனை செய்தேன்!"

"நீங்கள் எப்படிச் சென்றாலும் கோயில் நிர்வாகிகள் உங்களை ஓர் அமைச்சராகத்தானே வரவேற்று உபசரிப்பார்கள்?"

"என்னை வரவேற்பதற்காக எந்தவிதமான தடபுடலும் செய்யக் கூடாது என்று நான் பதவியேற்றவுடனேயே சுற்றறிக்கை ஒன்று அனுப்பினேன். மாலை கூட போடக் கூடாது என்று சொல்லியிருக்கிறேன். அதையும் மீறிச் சிலர் அன்புடன் எதையாவது செய்யத்தான் செய்கிறார்கள். ஒரு நண்பர் அப்படித்தான் தங்க மோதிரம் ஒன்றைப் பரிசளித்தார். நான் உடனே அதைத் திருச்செந்தூர் முருகன் கோயில் உண்டியலில் போட்டு விட்டேன். இனி இது போல் யாரும் செய்யக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லியிருக்கிறேன்."

"இது மாதிரியான திடீர்ச் சோதனைகளெல்லாம், அமைச்சரான புதிதில் மட்டும் செய்கிற ஆரம்ப கால சூரத்தனங்களா, இல்லை எப்போதுமே இதைச் செய்வீர்களா?"

"நான் எப்போதும் இதுபோல் செய்து கொண்டுதான் இருப்பேன். இல்லையெனில் அம்மா என்மேல் வைத்திருக்கும் நம்பிக்கைக்கே அர்த்தமில்லாமல் போய் விடும்!"

"கோயில் நிர்வாகங்களில் சீர்கேடுகள் இருக்கின்றன என்பதற்கு உங்கள் சோதனைகளே சாட்சி. இதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகிறீர்கள்?"

"பொதுவாகவே இப்போது பக்தி குறைந்து போய் விட்டது; கடவுள் பயம் போய் விட்டது. அதனால்தான் கோயில் நிர்வாகங்களிலேயே சீர்கேடுகள் நடக்க ஆரம்பித்து விட்டன. இந்த நிலைக்கு நாத்திகவாதம்தான் காரணம்."

"ஆக, நீங்கள் பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகளிலிருந்து மாறுபடுகிறீர்கள்."

"ஆம். மூடநம்பிக்கைகள் மலிந்து கிடந்த அந்தக் காலகட்டத்தில் அது சரியாக இருந்திருக்கலாம். ஆனால் இப்போதும் வீரமணி போன்றவர்கள் நாத்திகப் பிரசாரம் செய்வது வருந்தத்தக்கது. அத்தகைய பிரசாரம் கடவுள் பயத்தைப் போக்குவதால்தான் பல தவறுகள் நடக்கின்றன. இதை முதலில் நாம் தடுத்தாக வேண்டும். அதாவது இந்தத் தலைமுறையினரிடம் நாம் பக்தியை வளர்த்தாக வேண்டும். அப்போதுதான் எதிர்காலமாவது சிறப்பாக இருக்கும்."

"இந்தத் தலைமுறையினரிடம் பக்தியை வளர்ப்பதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"தமிழகத்திலுள்ள கோயில்களில் சுமார் ஐயாயிரம் கோயில்கள் ஒருவேளைப்

பூஜைக்குக் கூட வழியின்றிக் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன. இந்த நிலையில் மக்களிடம் பக்தியுணர்வு எப்படி வளரும்? இந்த அவல நிலை இனியும் நீடிக்கக் கூடாது என்பதுதான் அம்மாவின் எண்ணம். அதற்காகத்தான் 'கோயில் புனருத்தாரண நிதி'யை ஏற்படுத்தியிருக்கிறார்கள். முதலில் நாம் கோயில் பூஜைகள் ஒழுங்காக நடைபெறவும் கோயில்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும் ஏற்பாடு செய்து விட்டாலே போதும்; மக்கள் அனைவரும் கோயிலுக்கு வர ஆரம்பித்து விடுவார்கள். அப்போது பக்தி தானாகவே வளர ஆரம்பித்து விடும்.''

''நெல்லையப்பர் கோயிலுக்கு நீங்கள் சென்றிருந்த போதும் வௌவால் புழுக்கைகளின் நாற்றத்தை அனுபவித்திருப்பீர்களே! அவற்றையெல்லாம் விரட்டிச் சுத்தம் செய்வதற்கான ஏற்பாடுகள் ஏதேனும் செய்தீர்களா?''

''நெல்லையப்பர் கோயில் வௌவால்களை யாராலும் விரட்டி விட முடியாது. காரணம், போன ஜென்மத்தில் நெல்லையப்பர் கோயில் சொத்துக்களைச் சுரண்டி ஏப்பம் விட்டவர்கள்தான் இந்த ஜென்மத்தில் இப்படி வௌவால்களாகத் தொங்கிக் கொண்டிருக்கும் சாபத்தைப் பெற்று வந்திருக்கிறார்கள் என்பது ஐதீகம். இந்த நிலையில் எப்படி அவற்றை விரட்ட முடியும்?''

''ஏறத்தாழ எல்லாக் கோயில்களுக்குமே ஏராளமான சொத்துக்கள் இருக்கின்றன. ஆனால், அவற்றை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள்தான் கோயில்களுக்குச் சேர வேண்டிய குத்தகை போன்றவற்றைக் கொடுக்காமல் ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடமிருந்து வசூல் செய்ய என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?''

''சட்டரீதியான நடவடிக்கைகள் ஒரு புறமிருந்தாலும், அன்பு வழியிலும் பக்தி வழியிலும்தான் அவர்களிடையே மன மாற்றத்தை ஏற்படுத்த வேண்டுமென்று கருதுகிறேன்.''

''நீங்கள் சொல்லுகிற வழிமுறைகள் நடைமுறையில் பயனளிக்குமென்று முழுமையாக நம்புகிறீர்களா?''

''முழுமையாக நம்புகிறேன். பக்தி நெறியும் அன்புநெறியும் நிச்சயம் சாதிக்கும்.''

''கோயில் நிர்வாகங்களில் உள்ளூர் மக்களின் தொடர்பு அதிகம் இருந்தால் தான், கோயில் பணிகள் சிறப்பாக நடக்கும்; சீர்கேடுகளும் தடுக்கப்படும், இல்லையா?''

''ஆமாம். அதற்காகத்தானே அறங்காவலர் - குழுக்களை நியமிக்கிறோம்!''

''அதில் உங்கள் கட்சிக்காரர்களைத் தானே நியமிக்கிறீர்கள்?''

''யார் சொன்னது? அதெல்லாம் இல்லை.''

''அப்படி நியமனம் செய்யப்பட்டவர்கள் செய்தித்தாள்களில் கொடுக்கும் விளம்பரங்களே, அவர்கள் உங்கள் கட்சிக்காரர்கள்தான் என்பதைச் சொல்லி விடுகின்றனவே!''

''நாங்கள், ஒழுக்கமுள்ள - பக்தியுள்ள எல்லாக் கட்சிக்காரர்களையும்தான் நியமிக்கிறோம். அவர்கள் 'அம்மா'வுக்குச் செலுத்தும் நன்றிக் கடனாக அம்மா படத்தைப் போட்டு விளம்பரம் தருகிறார்கள். அதனாலேயே அவர்கள் எங்கள் கட்சிக்காரர்களாகி விட மாட்டார்கள்.''

''உறுதியாகத்தான் சொல்லுகிறீர்களா?''

''உறுதியாகத்தான் சொல்லுகிறேன்!''

''ஜெயலலிதா அமைச்சரவையில் உள்ள அமைச்சர்கள் அனைவருமே எந்தவொரு முடிவையும் சுயமாக - சுதந்திரமாக எடுப்பதில்லை. எதற்கெடுத்தாலும் ஜெயலலிதாவின் கருத்தை எதிர்பார்த்துக் காலம் தாழ்த்துகிறார்கள் என்று சொல்லப்படுவது உண்மைதானா?''

''ஒரு குடும்பத்திலுள்ள பிள்ளைகள், தாங்கள் எடுக்கும் முடிவுகள் பற்றிப் பெற்றோரிடம் ஆலோசனை கேட்பதில்லையா? அப்படிக் கேட்பது பிள்ளைகளின் சுதந்திர உணர்வைப் பாதிக்கிற விஷயம் என்று யாராவது சொல்வார்களா? அது போல்தான் நாங்கள் அம்மாவின் கருத்தை அறிந்து செயல்படுகிறோம். இதில் தவறுமில்லை; எங்கள் சுதந்திரம் பறிபோனதாகவும் அர்த்தமில்லை!''

''அமைச்சர்கள் அனைவரும் தங்கள் இலாகாக்கள் சம்பந்தப்பட்ட பணிகளைச் செய்வதற்கான நேரத்தை விட ஜெயலலிதாவைத் துதிப்பதற்குத்தான் அதிக நேரத்தைச் செலவிடுகிறார்கள் என்று சொல்லப்படுகிற குற்றச்சாட்டு பற்றி நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''

''தாயைத் துதிப்பது தவறா? தவறேதும் இல்லை. தினந்தோறும் தாயை வணங்கி விட்டுத் தங்கள் வேலைகளைத் துவங்கும் பிள்ளைகளை இதுபோல் யாராவது கிண்டல் செய்வார்களா? அப்படிச் செய்வதுதான் தருமமாகுமா? அதுபோல்தான் நாங்கள் செய்கிறோம்.''

''ஸ்ரீரங்கத்தில் நடந்த கருவறை நுழைவுப் போராட்டம் பற்றி உங்கள் கருத்து என்ன?''

''கோயில் கருவறைக்குள் சென்று பூஜை செய்வதற்கென்று சில விதிமுறைகள் - தகுதிகள் இருக்கின்றன. பிராமணர்கள்

சிறு வயதிலிருந்தே அந்த விதிமுறைகளைப் பயின்று, அதற்கான தகுதியைப் பெற்றுத் தான் உள்ளே நுழைகிறார்கள். அப்படி எந்த விதிமுறைகளையும் கடைப்பிடிக்காத மற்ற வர்கள் கருவறைக்குள் நுழைவது எப்படி நியாயமாக முடியும்?''

இப்படிக் கேட்கும் அமைச்சரின் சொந்த ஊர் திருச்செந்தூர் தாலுகாவிலுள்ள மாநாடு தண்டுபத்து என்னும் கிராமம். படிப்பு எஸ்.எஸ்.எல்.சி. வரைதான். தொழில் வியாபாரம். வியாபார நிமித்த மாகப் பல ஆண்டுகளுக்கு முன்பே சென்னைக்கு வந்து குடியேறி விட்டாலும் இன்னும் சொந்த வீடு ஏதும் வாங்க வில்லை. சென்னை புறநகர்ப் பகுதியான மடிப்பாக்கத்தில் ஆயிரம் ரூபாய் வாடகை யுள்ள சாதாரண வீட்டில்தான் வசித்து வரு கிறார். அமைச்சரான பிறகாவது சென்னைக் குள் குடியேறியிருக்கலாமே என்று கேட்ட போது, ''அங்கெல்லாம் வாடகை அதிகம். எதற்காக அவ்வளவு வாடகை கொடுக்க வேண்டும்? அமைச்சர்களுக்கான வீடுகளில் ஏதேனும் ஒன்று ஒதுக்கப்பட்டால்தான் நகருக்குள் குடிபெயர உத்தேசம். மற்றபடி இங்கேயேதான் இருக்கப் போகிறேன்!'' என்றவர் நம் காதருகில் வந்து, ''மடிப்பாக் கத்தில் ஓர் அமைச்சர் இருக்கிறார் என்று சம்பந்தப்பட்ட நகராட்சியினர் அந்தப் பகுதியிலுள்ள சாலைகளைச் சரிவரச் செப் பனிட்டால் மக்களுக்கு நல்லதுதானே! அதற்காகவும்தான் இங்கேயே இருக் கிறேன்!'' என்கிறார்.

ஆமாம், ஏன் இன்னும் சொந்த வீடு வாங்கவில்லை? ''எனக்குச் சொந்த வீடு ஆகாதென்று ஜோஸியர் சொல்லியிருக் கிறார். அதனால்தான் வாங்கவில்லை!'' என்று கூறும் அமைச்சர், 'இன்று நீங்கள் வாகனத்தில் பிரயாணம் செய்வது நல்ல தல்ல!' என்று ஜோஸியர் சொல்லி விட்டால், அன்று முழுதும் காரில் கூடப் போக மாட்டாராம். அத்தனை நம்பிக்கை!

குடும்பம் பற்றி?

நான்கு பெண்கள். மூன்று மகன்கள். ''குடும்பக் கட்டுப்பாட்டில் உங்களுக்கு நம் பிக்கை இல்லை போலிருக்கிறதே?'' என்று சிரித்துக் கொண்டே நாம் கேட்க, ''கடவு ளாகப் பார்த்துக் கொடுப்பதுதான் மக்கள் பேறு. அதைப் போய் நாம் கட்டுப்படுத் துவது சரியல்ல என்பதே எனது நம் பிக்கை!'' என்கிறார் அமைச்சர்!!

– இளங்கோவன்

அட்டை வண்ணப்படங்களும்,
படங்களும் : கோபிநாத்

**எஸ். சங்கரநாராயணன்**



**ச**ந்நிதித் தெருவில் கோவிலுக்குத் தெற்குப் பக்கமாய்க் கொஞ்சம் உள்வாங்கி னாற் போல வேலாயுதம் சார் வீடு. ஆறு 'ஏ' விஞ்ஞான ஆசிரியர் அவர். பசங்களின் சிம்ம சொப்பனம். படு கண்டிப்பு. முதல் நாள் பாடத்தில் கேள்வி கேட்ட பின்தான் மறுநாள் பாடம் ஆரம்பிப்பார். யாரைப் பார்த்து எந்தக் கேள்வியை எப்போது கேட் பார் என்று சொல்ல முடியாது. பதில் சொன் னவன் மட்டும் திருப்திப்படலாம். மற்றவர் பாடு திக்திக்தான்.

சார் வீட்டுக்குக் கொஞ்சம் தாண்டி சாமி யப்பன் இருக்கிறான். கோவிலுக்கு முடி வளர்த்து ஈறும் பேனுமாய்த் திரிகிற சாமி யப்பன். சாமியப்பனின் மிகப்பெரிய பிரச்னை பேனுக்கு அடுத்தபடியாக சயின்ஸ் சார்தான். அவர் கேள்வி கேட்டு பதில் தெரி யாவிட்டால் முகத்திலேயே அவனுக்கு மேக மூட்டம் கவிந்து விடுகிறது.

''சாமியப்பன் எந்திரி'' என்றார் சார்.

''என்ன சார்?'' என அவன் அசட்டுச் சிரிப்புடன் எழுந்து நின்றான்.

''நம்ப இதயம் நிமிஷத்துக்கு எத்தனை தடவை துடிக்குது?''

''76'' என்றான் ஒரு நம்பிக்கையுடன்.

''தெரியாதா?'' என்றார் சார்.

''...ம்ஹூம்.''

''நைட்டு பாடம் படிக்கலையா?''

''இல்ல சார்!''

''ஏன்?''

''78 சார்.''

''என்னது?''

''இதயத்துடிப்பு......''

''தெரியுமா தெரியாதா?''

''ச்'' என்றான் சாமியப்பன்.

''நீட்டு கைய. சார் ஸ்கேலை ஓங்கி னார்.''

''வேணா சார், வேணா சார்....''

சார் உடனே அடிக்கவில்லை. புகை யிலையை வகுப்பின் மூலையில் துப்பி னார். கண்ணில் போதையுடன் ''பயப்பட றாப்ல நடிக்கிறியே, வீட்ல படிச்சா என்ன?'' என்று சிரித்தார்.

''படிச்சேன், மறந்திருச்சி சார்.''

''சோறு திங்க மறக்கறியா?' என்று சார் மாணவர்களைப் பார்த்தார். அவர்கள் திகிலில் உறைந்து போய் உட்கார்ந்திருந் தார்கள்.

அடி. மீண்டும் அடி. சாமியப்பன் கையை உதறி உதறி அலறினான்.

அடிப்பதில் சாருக்கு அலாதிப் பிரியம். அடிக்கும் போது அவர் உற்சாகத்தைப் பார்த் துப் பசங்கள் திகிலடைந்தார் கள். யாராவது சரியான பதில் சொன்னால் வாத்தியார் வருத் தப்பட்டது போலிருந்தது.

சாமியப்பன்தான் அவருக்கு பட்டப்பேர் வெச்சான். ஆங்கில சரித்திர பூகோள ஆசிரியர்கள் எவ் வளவோ தேவலை.

சார் லீவு போட்டதாகச் சரித் திரமே இல்லை. போடும் நிலைமைக விலும் பர்மிஷன் போட்டுச் சமாளித்தார். ஒரேயொரு முறை அவர் சேர்ந்தாற்போல லீவு போட நேர்ந்தது. அவருக்கு அம்மை போட்ட நேரம். ஊரில் மந்திரிக்கவும் குறி கேட்கவும் சாமியப்பனின் அப்பாவிடம் தான் வருவார்கள். செவ்வாய் வெள்ளியில் அவன் வீட்டில் கும்பலாய் ஜனம் கூடும். சார் வீட்டுக்குப் போய் அப்பா மந்திரித்து வேப்பிலை சொருகிவிட்டு வந்தார். தட் சிணை வேண்டாம் என்றபோது சார்தான் வற்புறுத்தி நாலணா தந்தார். ரெண்டு ரூபாய்க்குக் குறைந்து அப்பா வாங்குவ தில்லை. அப்பா சாரைப் பார்த்துவிட்டுப் பேசாமல் வாங்கிக் கொண்டார்.

**வா**த்தியார் வீட்டுக்குப் பக்கத்தில் குடியிருப்பதில்தான் எத்தனை தொந்தரவு கள். அவர் வீட்டைத் தாண்டும் வரை சைக் கிளை உருட்டிக் கொண்டு போய், பின் குரங்குப் பெடல் போட்டு ஏறிப் போக ணும். எதிரில் வந்தால் வணக்கம் சொல்ல ணும். வீட்டுத் திண்ணையில் அவர் உட் கார்ந்திருந்தால் சுதந்திரமாய் விளையாட முடியாது. சரி, வடிவேலு வீட்டுக்குப் போய் அங்க விளையாடலாமென்றால் போற வழியில நந்திமாதிரி இவர்.

''எங்கடா போற...''

# ஸ்கேலாயுதம்

''ஆத்தா தோட்டத்துக்கு அனுப்பிச்சு சார்.''

''இப்பவா?''

''அப்பவே சொல்லிச்சு சார். நா மறந்துட்டேன்.''

''சரி, வர்றப்ப எனக்கு நாலு கொத்து மல்லி புடுங்கிட்டு வா.''

வடிவேலு வீடு நேராப் போயி சோத்துக்கைப் பக்கம். சாமியப்பன் வேதனையுடன் பீச்சாங்கைப் பக்கம் திரும்பினான்.

''அடேய் மூக்குறிஞ்சி...''

அவன் திரும்பிப் பார்த்தால், வடிவேலு.

''விளையாட வர்றியா?''

''இல்ல.''

''ஏன்?''

''ச்'' என்றான் சாமியப்பன். ''வீடு மாறி நாங்க வேற தெரு போறவரைக்கும் நா விளையாட முடியாது.''

''எங்க போறே?''

''தோட்டத்துக்கு...''

''ஏன்?''





''வாத்தியார் அனுப்பிச்சாரு...''

''நானும் வரேன்.''

''ஒன்னும் வேணா. நீ உன் வீட்டுக்குப் போடா.''

''நானும் வருவேன்'' என வடிவேலு கூட வந்தான். வேறு தெருவில் குடியிருந்து கொண்டு வாழ்க்கையை அனுபவிக்கிறான். பாரேன் படிக்காமல் அதைப் பத்திக் கவலையே படாமல் ஊர் சுத்தித் திரியறான்.

''சாமியப்பா படம் போலாமா?'' என்றான் வடிவேலு.

''படமா?''

''டூரிங்ல எம்ஜியார் படம், புதுப் படம் வந்திருக்கு.''

''போடா அவரு செத்தே வருஷமாச்சி. புதுப் படம்ன்றே?''

''வரியா வல்லியா?''

''ஐயோ நாளைக்கு சயின்ஸ் டெஸ்டு, தெரியும்ல.''

''நா படம் போறேன்...''

''என்ன படம்?''

''ஆயிரத்தில் ஒருவன்.''

''நல்லாருக்குமா?''

''டாப் படம்... நா பாக்கப் போறேன்.''

''நானும் வரேன்.''

''ஐயோ நாளைக்கு டெஸ்ட்டு, தெரியும்ல.''

''பிளீஸ்டா. தயவு செஞ்சிடா.''

''சரி வா... காசு?''

''இல்ல.''

''என்ட்டேயும் இல்ல.''

''அப்ப படத்துக்குப் போறேன் னியே?''

''நம்ப ரெண்டு பேர்த்துக்கும் நீ போயி காசு எடுத்துட்டுவா போ.''

வெள்ளிக் கிழமை. புதுப்படம் மாற்றும் நாள். ஜனங்கள் குறி கேட்கப் பிரியப்படும் நாள். ''சரி வா.'' கொத்துமல்லி பிடுங்கிக் கொண்டு ஓட்டமாய் ஓடினார்கள்.

''ஏண்டா நீ படிக்கலை?'' என்று சார் வடிவேலுவைக் கேட்டார்.

''நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து படிக்கப் போறோம்.''

''சாமி வீட்ல கூட்டமா இருக்கே?''

''நா அவங்க வீட்டுக்குப் போறேன் சார்'' என்றான் சாமி.

**சா**மியப்பன் வீட்டு வாசல் இருளில் திரளான ஜனம். அமாவாசை நெருங்கிய கனமான இரவு. குத்து விளக்கொளியில் கோயில் திருநீறும் பெரிய பொட்டுமாய் அப்பா கம்பீரமாய் உட்கார்ந்திருந்தார்.

''டேய் ரெகார்டு போட்டுருப்பான்டா.''

''ஷ்'' என்றான் சாமியப்பன்.

''சொல்லுங்க தாயி'' என்றார் அப்பா.

''பொருள் ஒன்னு தொலஞ்சி போச்சி சாமி.''

''என்ன ஜாமான்?''

''நாலு பவுன் சங்கிலி.''

''எங்க தொலச்சீங்க?''

''அதாங்க சாமி தெரில.''

''சரி...''

''டேய், படம் போட்றப் போறான்டா.''

''இரு.''

''பொருளு திரும்ப கைக்கு வருமா சாமி?''

'பாத்திரலாம்' என்றார் அப்பா. ''சுந்தர மகாலிங்கம்!'' என்று திடீரென்று கத்தினார். பயமாய் இருந்தது. ''சரி... இரு பத்து ரூவா தாம்பாளத்துல வெய்ங்க.''

''பத்தா?''

''பெரிய பொருளில்ல தொலச்சது...''

''பலன் ஒன்னுநானே. அஞ்சி வெச்சிக்கிடுங்க.''

''சாமி காரியம்...''

''ஏற்கெனவே ஜாமானக் காணோம்னு நாங்க அல்லாடிட்டிருக்கம். ஜாமான் கெடைக்கட்டும், பெறகு நாங்களே உங்கள வந்து பாக்குறோம்.''

''ஜாமான் ஆப்டிச்சின்னா இங்க யாரு வருவா?'' என்று அப்பா மார் குலுங்கச் சிரித்தார்.

''சரி இருக்கறதை வெய்ங்க, நாழியாவுது.''

அந்தம்மா இடுப்பில் கை வைத்தவள் ''ஐயோ என் பையைக் காணோம்'' என்றாள்.

**அ**வர்கள் சார் வீட்டைத் தாண்டிக் கொண்டிருந்தார்கள்.

''எங்கடா, புஸ்தகம்?''

''இவன் புஸ்தகத்தை வச்சி ரெண்டு பேரும் படிச்சிக்குவம் சார்...''

''நேரமாச்சி சார். போய்ப் படிக்கணும்'' என்றான் வடிவேலு.

''போங்க.''

அவர்கள் ஓட்டமாய் ஓடினார்கள்.

ஆனாலும் வடிவேலுவுக்கு பயமேயில்லை. துளிக்கூட இல்லை. அடிவாங்கி வாங்கி அவனுக்கு மரத்தே போய் விட்டது. படம் ஓடிக் கொண்டிருக்கும் போது சாமியப்பனுக்கு திடீர் திடீரென்று டெஸ்ட் நினைவு வந்தது. 'ஏன் என்ற கேள்வி' என்று எம்.ஜி.யார் பாடிய போது சார் ஞாபகம் வந்தது. ஐயோ, பயமாய் இருந்தது.



''மேடையில், சோடா பாட்டில், உருட்டுக்கட்டை சைக்கிள் செயின் வைத்திருக்கிறார்களே, ஏன்?''

''தலைவருக்கு அப்போதான் பேச மூடு வருமாம்!'' - எஸ்.கே. மூர்த்தி.

''டேய் வீட்டுக்குப் போலாண்டா.''

''இப்ப பாரு எம்ஜியார் ஒரு டைவ் அடிப்பாரு.''

''அது எம்ஜியார் இல்லடா. அவரோட டூப்பு. வா போலாம். நாம் படிக்கணும்...''

''இருடா பேசாம. இதுக்குத்தான் ஒன்னியெல்லாம் கூடச் சேத்துட்டு வரக் கூடாது.''

''காக தேத்தினது நான். நீதான் எங்கூட வந்தே...''

''பேசாமப் படம் பாரு'' என்று வடிவேலு தலையைச் சொறிந்தான்.

இடைவேளையின் போதும் வடிவேலு கிளம்பி வரவில்லை. வாங்கித் தின்காமல் நின்றவர்களை வேடிக்கை பார்த்தார்கள். ''ஏன்டா காசத் திருடிட்டு ஓடியாந்துட்டியே. உங்கப்பா குறிபார்த்துக் கண்டுபிடிச்சிற மாட்டாரா?''

''நீ வேற. பொட்டிக்குள்ள காசை ஒளிச்சி வெச்சிட்டு அம்மா அப்பா கேட்டா இல்லன்றா. அதயே அவரு கண்டு பிடிக்கல.''

**ப**டம் முடிந்து ஜனமும் சைக்கிளும் மாய்ப் போனது. பெண்கள் கூட்டம் அதிகம் தான். தலையைச் சொறிந்தபடியே வடிவேலு வெளியே வந்தான். அதுவரை இல்லாத அளவில் இருவருக்கும் பயம் ஏற்பட்டது.

''போடா எல்லா ஒன்னால.'

''ஓடும் மேகங்களே...''

''பாடாதே. பாட்ட நிறுத்து. நாளைக்கு...'' என்னுமுன் சாமியப்பனுக்கு அழுகை வந்தது. ''எல்லா ஒன்னால தான்...''

''ஒனக்கு அறிவு எங்கடா போச்சி. நா கெணத்துல குதிக்கச் சொன்னா குதிச்சிருவியா?''

நல்ல இருட்டு. படித்துறை. தர்மாஸ் பத்திரி. ஆலமரம். மணலில் புதுநடை நடந்து, பள்ளத் தெரு தாண்டி, ஓரம் முள்ளுக்காட்டில் பாட்டுச் சத்தம் கேட்டது. இரவு. இருட்டு. நல்ல அமைதி. பாட்டுச் சத்தம்.

''யார்றா இந்நேரம்?''

''அட நம்ப சார்றா...''

''ஸ்கேலாயுதம்.''

''ஆமாடா, உள்ள உக்காந்திட்டு ஏன்டா பாடறாரு.''

''அப்பிடிப் போடு. சாமி நம்ப சயின்ஸ் சாருக்கு ராத்திரின்னா பயம்டா. பாரு பாட்டு நடுங்குது.''

''பயமா?''

''இப்ப பாரு வேடிக்கையை. சாமி நாளைக்கு சயின்ஸ் டெஸ்ட் இல்லடா.''

''என்ன சொல்ற?''

வடிவேலு முள்ளுக்காட்டுக்குள் காலால் தரை தடவி முள்ளை விலக்கி, பதுங்கிப் பதுங்கிப் போனான்.

'அச்சம் என்பது மடமையடா...' சார் பாடிக் கொண்டிருந்தார். வடிவேலு அவருக்கு அருகே மிக அருகே போனான். கும்மிருட்டு 'அஞ்சாமை திராவிட...' வடிவேலு திடீரென்று 'ஹாஹாஹா' என்று சிரித்தான். ''ய்யா, யாரு?'' சார் எழுந்து நின்றார். முள் மறைவிலிருந்து ஒரு புதுக் குரல். ''ஜ""ன்னாம்பு குடு.'' சார் பதறி இருளில் வழி தெரியாமல் ஓட ஆரம்பித்தார். காலில் வேட்டியில் முள் குத்தியது. கிழித்தது. ''ஓடாதேடா. நில்லு. ஒரே அறை. கழுத்தை ஒரே கடி. ஹாஹ்ஹாஹா.''

சார் தலை மறைந்ததும் இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.



''நம்ம காதல் நிறைவேறாது கலா!''
''எதை வச்சுச் சொல்றீங்க?''
''அதோ தூரத்துல என்னைப் பார்த்து கோபவேசமா வர்ற என் மனைவியை வச்சுத்தான்!''
- த. குணசேகரன்.

''இதென்னடா?''

''சாரோட துண்டு.'' சிரித்தார்கள். ''நாளைக்கு டெஸ்ட் இல்ல.'' சிரித்தார்கள்.

**கா**லையில் சாரின் சம்சாரம் இவன் வீட்டுக்கு வந்திருந்தது. சார் கண்டுபிடிச்சிட்டாரோ, ஐயோ செத்தோம். பதறிப் போய் வாசலுக்கு வந்தான்.

''அப்பா இல்லியா?''

''இருக்காரு...''

''வீட்டுக்கு வரச் சொல்லு.''

''சார் வரச் சொன்னாப்லயா?'' என்றான் படபடப்புடன். 72-76-80.

''ஆமா.''

''ஏன்?''

''அவங்களுக்கு ஜுரம் தீயாய்ப் பொரியுது. காத்து கருப்பு தட்டீர்க்குமோ என்னமோ... அப்பா வந்து மந்திரிக்கணும்.''

''அப்பா'' என்று உற்சாகமாய் உள்ளே ஓடினான்.



# முன் அறிவிப்பு

பாதிப்படம் வரைக்கும் பணக்கார, நீதிமான்-கம்-தாதாவாகக் காட்டப்பட்டு, திடீரென்று கறுப்பு கவுனை மாட்டி விட்டதாலோ என்னவோ, சரத்குமாருக்கு, தான் சண்டை போடுவதா, டயலாக் பேசுவதா என்று செமை குழப்பம்.

ஆயுதக்கடத்தல், வைரக்கடத்தல் என்று ரெண்டு மசாலா சமாசாரங்கள். ஸோ, ஒரே அடிதடி. ரெண்டு வில்லன்கள். புதுமுகம். அந்த மொட்டை தேவலை. அடுத்தவர், பேசினால் அழுவது போலவும், சிரித்தால் பேசுவது போலவும்!

படம் முழுக்க யார்யாரை, எதற்காக அடிக்கிறார்கள், கொல்கிறார்கள் என்று சரியாகக் கண்டு பிடிக்கிறவர்களுக்கு பிளாஸ்டிக் பக்கெட் பரிசளிக்கலாம்!

ஹீரா ஊறுகாயில் காரம், உப்பு இரண்டும் மிஸ்ஸிங். மனிதாபிமானம் அது இது என்று பேசிக்கொண்டு டிபிகல் சினிமா டாக்டர். அசோகவன சீதை மாதிரி அநியாயத்துக்கு மூக்கைச் சிந்துகிறார். பிரைவேட் நர்ஸிங்ஹோம் டாக்டராக இருந்து கொண்டு கொலை கேஸின் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் தருகிறார். இது எந்த ஊரில் சாத்தியம் என்று புரியவில்லை.

மேலும் குறிப்பிட வேண்டியவர்கள் இருவர்.

தேவா.

சீரியஸான காட்சிகளிலெல்லாம் ட்ரம்பெட்டால் கிச்சுகிச்சு மூட்டுவது எந்த ஊர் ஃபேஷன் என்று தெரியவில்லை. அந்த ஜப்பானிய (?) மொழிப்பாட்டை 'கண்ணை மூடிக்கொண்டு' ரசிக்க முடிகிறது.

சந்திரமௌலி, கேமரா.

குணா குகை மாதிரியான (அதுவேதானா?) இடத்துச் சண்டை சீன்களில்-அம்மாடியோவ், அந்த Top angle! டெரிஃபிக்!

மற்றபடி ஆஹா, வாவ், சூப்பர், அற்புதம், ஃபன்டாஸ்டிக் இது மாதிரியான சொற்களை உபயோகிக்க டைரக்டர் இடம் விடுகிறவராகத் தெரியவில்லை.

படம் இப்படியாக இருக்கும் என்று யாராவது முன்னறிவிப்புத் தந்திருந்தால் ....ஹூம், நம்மராசி!

- ஆர்.பி.ஆர்.

LATEST™

LATEST LATEST LATEST

YOGA SAVITH

Mfd. & Mktd. by : **LATEST INDUSTRIES,** 581, Anna Salai, Madras-6. Ph: 455964

---

பாதுகாப்பிற்கும் சுத்தத்திற்கும் பெயர் பெற்றது




DOUBLE LAYER
AND
EXPORT QUALITY
MULTI LAYER
AVAILABLE

POLYCON

பாலிகான் வாட்டர் டேங்குகள், லாப்ட் டேங்குகள், வீட்டு உபயோக நீர்த் தொட்டிகள்.

POLYPAN

பாலிபன் P.V.C. பாத்ரூம், டாய்லட், கிச்சன் கதவுகள் பார்டீஷியன்கள் ஃபால் சீலிங்குகள் கிடைக்கும், தண்ணீரினால் பாதிப்பு இருக்காது, பூச்சி அரிக்காது!



இந்த விளம்பரத்தை கொண்டு வருபவர்களுக்கு கவர்ச்சிகரமான தள்ளுபடி உண்டு.

PLASTIC DOORS FOR BATHROOMS AND TOILETS.

**ARVIND MARKETING**

9, CHAKKARAPANI STREET, SATHYA GARDEN SALIGRAMAM,
(OPP. AVICHI HIGH SCHOOL) MADRAS -93. PH: 4821233, 4832149.

பறை : பக்கத்துத் தியேட்டர் போரடித்தால், மாணவர்களுக்கு ஒரு சரணாலயம்.

ண்டென்ஸ் : மாணவர்களுக்கு மிமிக்கிரி பயற்சியளிக்கும் முறை.

பாஷை : எந்த அகராதியாலும் விளக்கம் தர முடியாத சொற்கள். ஃபாஷனை விட வேகமாய்ப் கள் புகும்.

கண்மன் : கல்லூரிகளின் தும்பா. புகையைக் கணக்கிட்டால் தினமும் நாலு ராக்கெட் விட்டது யத்தோன்றும்.

பிட் : ஒரு பாட நூலின் சாரத்தை உள்ளங்கை அகலத்தாளில் அடக்கும் மைக்ரோஃபிலிம்.

லைப்ரரி : பகலுணவுக்குப் பின் மாணவர்கள் வரும் இடம். தூக்கத்தின் ராஜ்ஜியத்தில் உய்யலாலா.

ஐடெண்டிடி கார்டு : தியேட்டரில் டிக்கெட்டுக்கு விஸா.

தொழிற் கல்வி : அந்தக் காலத்தில் தனவந்தர்களின் தர்மம்; இப்போது தொழிலதிபர்களின் டைவர்சிபிகேஷன்.

கல்லூரிப் பேரவைத் தேர்தல் : நேரிடையாய் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறையும், மறைமுகமாய் ஆண்டுதோறும் அரசியல் கட்சிகளால் சுற்றப்படும் 'காதுல பூ'.

பியூன் : தலையைச் சொறிந்து கொண்டு நின்றே காசு பண்ணும் ரோபோ.

ாவைத் திட்டுகிற நீண்ட கேச, குறுந்தாடிகளின் தோளில் தொங்கும் வெற்று சமாசாரம்.

த்தில் மட்டுமே ஞாபகமாய் பீஸ் பீஸாய்க் கொண்டு வரப்படும் காகிதக் கற்றை.

ரண்ட் : பாரதிராஜாக்கள், ஹீரோயின் தேடிவரும் வேடந்தாங்கல்.

ர்' படையெடுப்பில் புறமுதுக்கிட்டு ஓடிவிட்ட 'நோஞ்சான்'.

தும், பழைய மருமகள் மாமியார் ஆகும் பிரமோஷன்.

ந்தக் காய்கறி சீப் என்று சொல்லிவிடுகிற தர்மா மீட்டர்.

- எஸ். சந்திரமௌலி

பூஜ்யாலக்ஷ்மியை கடந்த நான்கு நாட்களாகச் சந்திக்க முயன்று கொண்டிருந்த ராதாவால் அன்று காலைதான் அவளைப் பார்க்க முடிந்தது. அவுட்டோர் ஷூட்டிங் முடிந்த பிறகு இளைப்பாறிக் கொண்டிருந்த பூஜ்யா அவளை ஆசையுடன் வரவேற்றாள்.

''ஹலோ ராதி! நாலு நாளா ஃபோன் பண்றியாமே! என்ன விஷயம்? சந்தோஷமா இருக்கியா?''

இந்தப் பரிவில் ராதா நெகிழ்ந்து போனாள்.

''பூஜ்யா - நான் உன்கிட்டே ஒரு உதவி கேட்க வந்திருக்கேன்.''

''என்ன ராதா என்னவோ போலப் பேசறே? நான் உனக்கு உதவணுமா? நீ என்ன சொல்லுறே?''

ராதா தனது கைப்பையிலிருந்து, அழகான, வைரம் பதித்த மோதிரம் ஒன்றை வெளியே எடுத்தாள்.

''பூஜ்யா - இந்த மோதிரம், உனக்கு நினைவு இருக்கா?''

பூஜ்யா சிரித்தாள்.

என்ன ராதா இப்படிக் கேட்கறே? இது உனக்கு நான் கல்யாணத்துக்குக் கொடுத்த மோதிரமில்லை?''

''இதை வெச்சிண்டு எனக்கு நாலாயிரம் ரூபா கடனாகக் கொடுக்க முடியுமா?''

பூஜ்யா அதிர்ந்து போனாள். சில நிமிடங்களுக்குப் பிறகு அவள் பேசிய போது அதில் பரிவும் பாசமும் இருந்தது.

''ராதா, என்னோட பழகிட்டு, என் மனசை நல்லாப் புரிஞ்சுக்கிட்டிருக்கிற நீயா இப்படிப் பேசறது? உனக்கு அவசரமாப் பணம் வேணும்னா, அதைச் சும்மா, கைமாத்தாக் கொடுக்க மாட்டேனா? நான் உனக்கு ஆசையாக் குடுத்த மோதிரத்தை என்கிட்டேயே அடகு வைக்கப் பார்க்கிறியே! நா உனக்கு அந்நிவி அன்னியமாய்ப் போயிட்டேனா? உனக்கு என்ன கஷ்டம்? என்கிட்டே சொல்லு ராதி.''

ராதாவால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு கேவிக் கேவி அழுதாள். பூஜ்யா, அவள் அழுது ஓயட்டும் என்பது போல் ஆதுரத்துடன் அவள் முதுகைத் தடவிக் கொடுத்தாள்.

சில நிமிடங்களில் சற்று அடங்கிப் போன ராதா பூஜ்யாவை ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு மெல்லிய குரலில் தனது வாழ்க்கையைப் பற்றிக் கூறினாள். தான் ராமனிடமிருந்து நிரந்தரமாகவே பிரிந்து விடத் தீர்மானித்திருப்பதாகவும் கூறினாள்.

''ஓ காட்! நீ கல்யாணம் பண்ணிக்கிட்டு சந்தோஷமான வாழ்க்கையை அமைச்சிண்டுட்டேன்னு நான் ரொம்ப கர்வப்பட்டேன். அதுவும் இப்படியா போய் முடியணும்? பேசாம மறுபடியும் எங்கூட வந்திடும்மா.''

''இல்லை பூஜ்யா. நான் வேலைக்குப் போறதாகத் தீர்மானம் பண்ணிட்டேன். நித்யா அக்காவோட ஃபிரெண்ட் பிரஸன்னா நல்ல வேலை வாங்கித் தர்றதாகக் கூறியிருக்காரு.''




''ஓகே ராதா. உனக்கு அதுதான் மனசுக்கு நிம்மதின்னா அப்படியே செய். உனக்கு எப்போ உதவி வேணும்னாலும் இந்த பூஜ்யா இருக்கா என்கிறதை மறந்திடாதே.''

உள்ளே எழுந்து போன பூஜ்யா சிறிது நேரத்தில் திரும்பி வந்தாள்.

''இந்தா ராதா. இதுல நீ கேட்ட நாலாயிரம் இருக்கு. வாழ்க்கையில சொந்தங்களை முறிச்சிக்கிடறது ரொம்ப சுலபம். ஆனா மறுபடி ஒட்டவைக்கிறது சிரமம். நான் ஏதோ வசனம் பேசறேன்னு நெனக்கக் காதே. தப்புப் பண்ணாத மனுஷன் எவனும் இல்லை. மனசு திருந்தி நடந்துக்கிறவனும் ஒலகத்துல உண்டு. அவசரப்பட்டு இப்போதைக்கு ஒரு முடிவுக்கும் வராதே.''

---

ஆபஸ்தம்பன்

**கா**ர்த்திகை மாதத்துக் காற்று சில் லென்று சன்னல் வழியே ஊடுருவியது. மாலை ஐந்தரை மணிக்கெல்லாம் லேசான இருள் பரவத் தொடங்கியிருந்தது.

வாசலில் சிறிய அகல் விளக்கை ஏற்றி வைத்த ராதா அது மங்கலாக எரிவதையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

பார்வதி, துர்காவின் வீட்டுக்குச் சென்று இரண்டு நாட்களாகி விட்டிருந்தன. அவள் தற்சமயம் இங்கு இல்லாததும் நல்ல திற்குத்தான் என்று ராதா நினைத்தாள். உள்ளே சென்று சிறிய சூட்கேசுடன் முன் னறையில் வந்து உட்கார்ந்து கொண்டாள். கடந்த ஏழு மாதங்களாகப் பிறந்த வீட்டுக்கு அனுப்பியிருந்த தொகையான ரூபாய் மூவா யிரத்து ஐநூறை ஒரு கவரில் போட்டு டெலி ஃபோன் அருகே வைத்தாள்.

கேட்டருகே ராமனின் பஜாஜ் ஒலித் தது. உள்ளே சென்று காப்பியையும் டிஃப னையும் எடுத்து வந்து மேஜை மீது வைத்தாள்.

அவர்களிடையே பேச்சு வார்த்தைகள் நின்று போய் வெகு நாட்களாகி விட்டிருந் தன. அவர்களிடையே கனிந்த காதல் எங்கோ தொலைந்து போய் விட்டிருந்தது.

அதைத் தேடிப் பிடிக்க முடியும் என்ற நம் பிக்கை அவளிடம் இல்லை. அதைத் திரும் பப் பெற வேண்டும் என்ற தீவிரம் அவனிட மும் இருப்பதாகத் தெரியவில்லை.

காப்பியைக் குடித்து விட்டு கோப் பையை மேஜை மீது வைத்த அவன் முன் அவள் காகித உறையை வைத்தாள். அவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவள் உயிரற்ற குரலில் கூறினாள் -

''இதுல மூவாயிரத்து ஐநூறு ரூபாய் இருக்கு. இத்தோட என்னோட கடன் முடிஞ்சு போச்சு. கீழ்த்தரமான லட்சியங் கள் கொண்ட ஒங்க கூட இனிமேயும் நான்



வாழ விரும்பலை. நான் போறேன்.''

அவன் திடுக்கிட்டு அவளைப் பார்த்தான். அவள் பெட்டியும் கையுமாக நிற்பதைப் பார்த்ததும் அடிவயிற்றில் குழப்பமான உணர்வு ஒன்று குபீரென்று எழுந்தது. அது துக்கமா, ஏக்கமா, அல்லது ஏமாற்றமா என்று புரியவில்லை. கடைசியில், இவளைப் பிடித்து நிறுத்த இயலாது என்ற உணர்வு வார்த்தைகளாக வெடித்தது.

''அந்த சினிமாக்காரிகிட்டேயே போகப் போறியாக்கும்?''

அவள் மௌனமாக நின்றாள்.

''எங்கே வேணுமானாலும் போய்த் தொலையேன்! நான் தடுத்து நிறுத்துவேன்னு மட்டும் நினைக்காதே. ஆனா - ஒண்ணு மட்டும் சொல்றேன் கேட்டுக்கோ. இங்கே இருந்ததை விடச் சௌகரியமாகவும், கௌரவமாகவும் வாழ முடியும்னு மட்டும் நினைக்காதே!''

அவள், முகத்தில் கேலிப் புன்னகை படரக் கூறினாள்.

''சௌக்கியம்' என்கிற வார்த்தை மனுஷனுக்கு மனுஷன் மாறுபடும். என்னைப் பொறுத்தவரையிலும் எப்படிப்பட்ட வாழ்விலும் என்னால் சௌகரியமாக இருக்க முடியும். இரண்டாவதாகச் சொன்னீங்களே கௌரவம்! சே! இந்த வார்த்தையை உச்சரிக்கக் கூட உங்களுக்கு யோக்கியதை கிடையாது.''

மேற்கொண்டு எதுவும் பேச வேண்டாம் என்று எண்ணினாலும், விகவத்தால் கேவலம் ஒரு இயந்திர மனிதனாக மாற்றியமைக்கப்பட்டிருக்கும் இவனையும் சற்றே அதிர்ச்சி அடைய வைக்க வேண்டும் என்ற ஆர்வத்தை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை. ஒரு கணம் நின்று அவன் பக்கம் திரும்பினாள். ''அடுத்த வாரம் 'என்குயரி' முடிந்ததும் ஒங்க விகவம் இருக்கிற இடம் தெரியாமப் போயிடுவான். அவனுக்கு எதிராக நான் சாட்சிக் கூண்டுல ஏறி நின்னுண்டு அவனோட தில்லுமுல்லு எல்லாத்தையும் வெட்ட வெளிச்சமாக்கப் போறேன்...''

அவள் நடந்து போவதையே திக்பிரமை பிடித்தவன் போல் பார்த்துக் கொண்டு நின்றான் அவன்.

''ராதா - என்ன காரியம் பண்ணிட்டு வந்திருக்கே! ராமன்கிட்டே போய் விகவத்துக்கெதிராக சாட்சி சொல்லப் போறதாகச் சொல்லிட்டு வந்திருக்கியே! அவன் பொல்லாதவன் ராதா. எதற்கும் அஞ்ச மாட்டான்.''

ஒரு சன்னமான சிலிர்ப்பு நித்யாவின் நெஞ்சுக்குள் ஓடி மறைந்தது. ராதா சிரித்தாள்.

''சிரிக்காதே ராதா. இந்த விசாரணை முடியற வரையிலுமாவது, நீ வெளியே எங்கும் போகாதே. எனக்கென்னவோ பயமா இருக்கு.''

ராதா அவளருகே வந்து நின்று கொண்டு, அவள் தோள்களின் மீது தனது கைகளை அழுத்தமாகப் பதித்தாள்.

''இது என்ன அக்கா? வேடிக்கையா இல்ல இருக்கு? உங்களுக்கும் கூட பயப்படத் தெரியுமா என்ன?''

''உனக்கு வேடிக்கையாக இருக்கலாம். நான் சம்பந்தப்பட்ட விஷயம்னா அதுல எனக்கு பயம் இருக்காது. ஆனா இது? இது உன்னைப் பற்றின பயம் ராது. உனக்கு விகவத்தைத் தெரியாது. அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எந்த மகாபாவத்தையும் பண்ண அஞ்ச மாட்டான். அதிருக்கட்டும். நீ இங்கே இருக்கறது அவனுக்குத் தெரியுமா?''

''தெரியாது. நான் பூஜ்யாகிட்டப் போறதாகத்தான் அவர் நெனச்சிண்டிருக்கார்.''

''சரி போ. கைகால் அலம்பிண்டு வா. டிரெஸ் மாத்தறதுன்னா மாத்திக்கோ.''

நித்யாவுக்குக் கவலையாக இருந்தது. ராதா ஒரு இக்கட்டான சூழ்நிலையில் மாட்டிக் கொண்டிருக்கிறாள் என்பதில் அவளுக்கு இம்மியளவும் சந்தேகம் இருக்க

வில்லை.

என்ன நிலைமை இது! தானாக விரும்பிச் செய்து கொண்ட திருமணம். காதல் திருமணமும் கூடத் தோல்வியைத் தழுவுவதுண்டா என்ன? ராமனால் இவளுடன் ஏன் நேர்மையாக வாழ முடியவில்லை? எல்லாம் விகவத்தின் சகவாசத்தால், அவனுடன் சென்று ஒட்டிக் கொண்டதால் வந்த வினை. ராமன் என்ன, தானாகவா போய் ஒட்டிக் கொண்டான்? விகவமல்லவா அவனுடைய பலவீனங்களை அறிந்து கொண்டு தருணம் பார்த்துத் தூண்டிலைப் போட்டான்! மீன் எளிதில் சிக்கிக் கொண்டு விட்டது... ஒருவேளை விசாரணை நடக்கும் போது ராமன் அப்ரூவராக மாறி விட்டால்! ராதாவுக்காகவாவது அவன் மாறி விட்டானேயானால் எத்தனை நன்றாகவிருக்கும்!

மாறுவானா? செஞ்சோற்றுக் கடன் என்று கர்ணன் துரியோதனனிடம் ஒட்டிக் கொண்டிருந்தது போல் விகவத்திடமே ஒட்டிக் கொண்டிருப்பானோ?

அழைப்பு மணி ஒலிக்க, ராதா எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

''ஹலோ ராதா! எப்போ வந்தீங்க?'' பிரசன்னா சகஜமாக வந்து உட்கார்ந்து கொண்டான்.

நித்யா ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு உள்ளே சென்றாள். இரண்டு கோப்பைகளில் காப்பியும் தட்டுகளில் தேன் குழலும் எடுத்து வந்தாள். பிரசன்னா ஒரு கோப்பையைக் கையில் எடுத்துக் கொண்டான். மற்றொரு கோப்பையை ராதாவிடம் நீட்டினாள்.

''என்ன அக்கா இது! இப்பவே மணி ஏழரை. வந்தவுடனே ஒரு காப்பி குடிச்சாச்சு. அப்புறம் ராத்திரி சாப்பிட வயத்துல இடம் இருக்காது.''

''அதுக்குத்தான் இந்தக் காப்பியைத் தந்து உன் வயிற்றை நிறைக்கிறேன் ராதா. இன்னைக்கு டின்னர் ரொம்ப சிம்பிள்.''

காப்பி கோப்பையை மேஜை மீது வைத்த பிரசன்னா ராதாவைப் பார்த்துக் கூறினான்.

''விசாரணைக்கு இன்னமும் ஐந்தே நாட்கள்தான். நீங்க எங்கேயும் வெளியே போயிடாதீங்க மேடம். நான் உங்களைப் பற்றி ரொம்பக் கவலைப்படறேன். என்ன நித்யா?''

''இதையேதான் நானும் அவகிட்டே சொல்லிண்டிருந்தேன் பிரசன்னா.''

ராதா சிரித்துக் கொண்டே பதிலுரைத்தாள்.

''விகவத்தைப் பற்றி ஒங்க ரெண்டு பேருக்கும் தெரிஞ்சிருக்கிறதை விட எனக்குத் தெரியும். அவன் ஒரு பயங்கரமான நச்சுப் பாம்பு. ஆனா, அந்தப் பாம்போட விஷம் என்னை ஒண்ணும் பண்ணாது. மிஸ்டர் பிரசன்னா - நான் உங்க ரெண்டு பேருக்கும் ரொம்பவும் கடமைப்பட்டிருக்




கேன். அதுக்காகவாவது நான் வெளியே போகாமலிருக்கேன், சரியா? நீங்க ரெண்டு பேரும் அனாவசியமா என்னைப் பற்றிக் கவலைப்பட நான் இடம் தர மாட்டேன்.''

''நன்றி ராதா'' என்ற பிரசன்னா நித்யாவைப் பார்த்துக் கேட்டான்.

''நாம ரெண்டு பேரும் அந்தச் சொக்கலிங்கத்தைப் போய்ப் பார்த்தாலென்ன? ராதா விசாரணையில சாட்சி சொல்லப் போறதாகச் சொன்னா, ஒருவேளை அவன் அப்ரூவரா மாறினாலும் மாறலாம்.''

நித்யா ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தாள்.

''ஓகே நித்யா - ராதா. நான் புறப்படறேன். நாளைக் காலையில் எட்டு மணிக்குத் தயாராக இரு நித்யா. நாம ரெண்டு பேரும் அவரைப் போய்ப் பார்க்கலாம். நாளையிலிருந்து நான் இருபது நாட்கள் விடுப்பு எடுத்துண்டிருக்கேன். எதைப் பற்றியும் கவலைப்படாதேம்மா'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டவனையே பார்த்துக் கொண்டு நின்றாள் நித்யா.

(தொடரும்)

# ஜிப்ஷா காத்திருக்கிறாள்



டெர்மினலில் வியாஸ் காத்திருந்தான். அவன் கையில் நிகோட்டின் இல்லாத சிகெரெட் புகைந்து கொண்டிருந்தது. தன்னுடைய Virtual Reality Player ஐ இயக்கி - தனக்காகக் காத்திருக்கும் காதலி ஜிப்ஷா என்ன செய்து கொண்டிருப்பாள் என உன்னித்தான். சங்க காலத் தலைவி போல உடலில் பசலை படிந்து நிலாவின் மெஹா டெர்மினலில் காத்திருந்தாள். மூன்று வருட இடைவெளியில் மார்புகள் அளவில் பெரிதாகக் கனத்திருந்தன. சிரித்தபடி VRP ஐ ஆஃப் செய்தான் வியாஸ்.

வான டாக்ஸிகளுக்காகக் காத்திருந்தது கதம்ப ஜனத்திரள். வான டாக்ஸிகள் வருவதும் போவதுமாய் இருந்தன. நிலா காலனி வழி செல்லும் பச்சை நிற வானடாக்ஸி வந்து நின்றது.

வியாஸ் வாகனத்துக்குள் நுழைந்தான். ஏற்கெனவே ஏராளமான பயணிகள் தத்தம் இருக்கையில் அமர்ந்திருந்தனர். வியாஸின் இரட்டை இருக்கையின் காலி இடத்துக்கு ஒரு மனிதன் வந்து சேர்ந்தான். வயது 25 இருக்கக்கூடும். ஆறடி உயரமும் பம்பையான கேசமும் விசித்திரமான தாடியும் வைத்திருந்தான். பைபர்கிளாஸ் ஆடை உடுத்தியிருந்தான். பற்கள் சீராய் யானைத் தந்த வெண்மையில் அமைந்திருந்தன. ஆரோக்கிய மனிதன் மூன்றரை நொடிகளுக்கு ஒரு முறை கண் இமைப்பான். வியாஸ் பார்த்த மனிதனோ கூடுதல் அவகாசம் எடுத்துக் கொண்டான். கையில் எந்தவொரு பயணச் சுமையும் அவன் வைத்திருக்கவில்லை. ஆர்த்தரைட்டீஸ் வந்தவன் போல் அவதியாய் அமர்ந்தான்.

வியாஸ் திரும்பி ஸ்நேகபாவமாய் வந்தவனை பார்த்துப் புன்னகை செய்தான். வந்தவனோ இறுக்கமான முகபாவம் காட்டினான்.

வானடாக்ஸி 'பாம்' என்ற சப்தத்துடன் புறப்பட்டது.

வியாஸ் சுவாரசியமாய் வந்தவனையே ஆராய்ந்தான். அவனுடைய வித்தியாசமான மேனரிஸங்கள் வியாஸைக் கவர்ந்தன.

''எங்கு போகிறீர்கள்?'' நட்பு வளர்க்கும் தொனியில் வினவினான் வியாஸ்.

வந்தவன் திரும்பி உன்னித்தான். பின் தனக்குத்தானே ஏதோ பேசிக் கொண்டான்.

'மன நோயாளியோ?'

''உங்களைத்தான் கேட்டேன். செவ்வாயின் தலைமை டெர்மினலுக்குப் போகிறீர்களா?''

ஆர்னிகா நாசர்

''ஆ - ஆ - ஆமாம்!''

''வித்தியாசமான 'ஒலியன்' உங்களுக்கு!''

''இருக்கலாம்.''

''என்னிடம் பேச உங்களுக்கு விருப்பமில்லையா? நான் நிலாவின் உல்லாசக் காலனிக்குச் செல்கிறேன். பயண நேரம் முழுவதும் நாம் ஊமையாய் இருந்தால் போரடித்து விடும் நண்பனே!''

''சரி பேசுவோம்....''

''உங்கள் பெயர் சொல்லவேயில்லையே?''



''என் பெயரா? பாபன்.... பாபன்...''

''என்ன வேலை பார்க்கிறீர்கள்?''

''நானா? மருத்துவக்குணம் கொண்ட பால் சுரக்கும் கால் நடைகள் பண்ணையில் மருத்துவன்...''

''வித்தியாசமான பணிதான்...''

''நீங்கள்?''

''அப்பாடா! முதல் முறையாக உங்களைக் கேள்வி கேட்க வைத்துவிட்டேன். குட் காட்... நான் ஒரு தொழில் முறை ஓவியன்...''

''நல்ல வருமானமிருக்கிறதா?''

''ஐ லீட் எ லாவிஷ் லைப் மேன்...''

''டாபிக் மாற்றுகிறேன்....''

''பேசேன்....'' ஒருமைக்குத் தாவினான் வியாஸ்.

''பூமி அதிபர் ஆட்சியைப் பற்றி உன் கருத்து...?''

''ஐ ஃபீல் டெலிகேட். அபிப்ராயம் இல்லை பாபன்...''

''கருத்தில்லாத மனிதன் - தலையில்லாத மனிதன் வியாஸ்!''

''அஃப்கோர்ஸ் பாபன்... ஐ டெஃபி பரேட்லி நெக்லக்ட் பாலிடிக்ஸ். உனக்காக கருத்துக் கூறுகிறேன். நாட் பேட் பாபன்...''

''உன் கருத்து தவறு. முட்டாள்தனமான ஆட்சி நடக்கிறது தெரியுமா உனக்கு?''

''எப்படிச் சொல்கிறாய்?''

''பின்னென்ன? அடுத்த கிரகவாசிகளுக்கு கூடுதல் உரிமையும் இரட்டைக் குடி உரிமையும் வழங்கியிருக்கிறார் பூமி அதிபர். அவர்களுக்கு வேலை வாய்ப்பில் 15 சதவீதம் ஒதுக்கியுள்ளார். இன்னும் ஏராளமான பாலிஸி டிஸிஷன் கோளாறுகள். குறிப்பாக 'மார்ஷியா' கிரகத்து மனிதர்கள் மிக ஆபத்தானவர்கள். என்றாவது ஒரு நாள் மித்ர பேதம் செய்து பூமி முழுமையையும் அடிமைப் படுத்தப்போகிறார்கள்.''

''ஆதாரமான சில உண்மைகளை வைத்துக் கொண்டு ஏராளமாக கற்பனை செய்கிறாய் பாபன்...''

சீரியஸானான் பாபன். ''இது நிஜமான நிஜம் வியாஸ்!''

''அதற்கு நாம் என்ன செய்ய முடியும் பாபன்?''

'என்ன முடியுமாவா? அதிபரின் தவறான நடவடிக்கைகளுக்கு எதிராகக் குரல் கொடுக்க வேண்டும்.''

''உரையாடல் வம்பு திசை போகிறது. மாற்றுவோம்....''

பாபன் மௌனித்தான்.

''பாபன்! இதுவரை நீ யாரையும் காதலித்திருக்கிறாயா?''

''நெவர்.... நீ?''

''அதன் நிமித்தம்தான் என் நிலாப் பயணமே. நான் ஒருத்தியை 'ஜில்லியன்' தரம் நேசிக்கிறேன் பாபன்...''

''யாரவள்?''

''மூன்று வருடங்களுக்கு முன் நிலாவில் 'அகில காலக்ஸி உல்லாசத் திருவிழா' நடந்தது தெரியுமா?''

''ஆமாம்.....''

''அதில் மார்ஷியா கிரகத்தைச் சேர்ந்த ஜிப்ஷா என்ற பெண் நடனமாடினாள். கண்டதும் காதல் கொண்டோம்....''

''அப்படியென்ன அபூர்வ வசீகரம் அவளிடம்?''

''என்ன நண்பா இப்படி கேட்டு விட்டாய்? ஜிப்ஷா ஒரு மின்சார மல்லிகை. மினியேச்சர் மின்னல். போன்ஸாய் நிலா. அவள் இஸ்தர் எனும் பாபிலோனிய பெண் காதல் கடவுளின் நேரடி வாரிசு. காதல் என்ற தலைப்பில் 5000 விஷயக் குறிப்புகள் தெரிந்து வைத்திருக்கும் நிபுணி.

''பழகிய இரு பூமி நாட்களில் பிரிந்தோம். மூன்று வருடங்களாக வெறும் கடிதத் தொடர்பு மட்டும். நீண்ட இடைவெளிக்கு பின் இன்றுதான் சந்திக்கப் போகிறோம். எவ்வளவு கிளுகிளுப்பான சந்திப்பாய் இருக்கும்? வாவ்!''

''இந்த சந்திப்பு நடக்கவில்லை என்றால்?''

வியாஸ் ஸ்தம்பித்தான்.

''என்ன பிதற்றுகிறாய் பாபன்?''

''இல்லை... ஏதேனும் காரணத்தால் உன் ஜிப்ஷா வராவிட்டால்?''

''இட்ஸ் ஹைலி இடியாடிக்.''

''அவள் வந்து விடுவாள் - சரி... நீ போகாவிட்டால்?''

''அபத்தம் அபத்தம். இதோ நான்தான் போய்க் கொண்டிருக்கிறேனே?''

''பயணம் முடியாத வரைக்கும் இலக்கு அடைதல் நிச்சயமல்ல வியாஸ்!''

''உன் பேச்சு பயமூட்டுகிறது பாபன்...''

''பயமூட்டவில்லை. ஒரு சாத்தியத்தைச் சொன்னேன்.''

''என்ன சாத்தியம்?''

''நாம் போகும் வானடாக்ஸி ஏதேனும் விபத்தில் சிக்கிக் கொண்டால்?''

''உன் ஹேஸ்யம் தியரி ஆஃப் ப்ராபபலிட்டிக்கு முரணானது!''

''சரி - இந்த வானடாக்ஸியை யாரும் பாலிமர் பாம் வைத்துத் தகர்த்து விட்டால்?''

திடுக்கிட்டான் வியாஸ்.

''அதெப்படி? ஸ்னிப்பர் ரோபோ - மெட்டல் பாம் டிடக்டர் - லேசர் ஸ்கிரீனிங் இத்தியாதி இத்தியாதி மீறி எப்படி பாம் வானடாக்ஸிக்குள் விதைக்க முடியும்?''

''என்னால் முடியும் வியாஸ்!''

''-எ- என்ன சொல்கிறாய்?''



''லாட்டரி கடைக்காரர் பேரன் பாஸா விட்டானா?''

''ஒரு நம்பர் வித்தியாசத்துல ஃபெயில் ஆயிட்டானாம்!''

- நெல்லை எஸ். அருணா.

''ஸாரி வியாஸ்... நான் இந்த வான டாக்ஸியில் பாம் வைத்துள்ளேன். இன்னும் 16 நிமிஷம்தான். என்னுடன் சேர்ந்து கலத்தின் அனைத்துப் பயணிகளும் பிரபஞ்ச சமாதி - தெரியுமா உனக்கு?'' ஒளித்திருந்த எலக்ட்ரோஸ்டாடிக் துப்பாக்கியை வெளி எடுத்தான் பாபன்.

''என்னைக்காட்டிக் கொடுக்க முயன்றால் இத்துப்பாக்கி உமிழும் 8000 வால்ட் மின்னேற்றத்துகள் உன்னைப் பொசுக்கி விடும் வியாஸ்!''

''டாமிட்! நீ ஒரு மனநோயாளி. பொய் பேசுகிறாய். நீ வரும் போது கை ஆட்டிக் கொண்டேதானே வந்தாய்?''

''பாமை நான் கார்கோவில் வைத்திருக்கலாமில்லையா?''

''பாபன்! ப்ளீஸ்... எதற்கிந்த பாம் விளையாட்டு?''

''முதலிலேயே நான் சொல்லவில்லை? பூமி அதிபரின் நடவடிக்கைகள் எங்களுக்குப் பிடிக்கவில்லை என்று.....''

''எங்களுக்கென்றால்?'' காகப்பார்வை காட்டினான் வியாஸ்.

''எங்கள் இயக்கத்துக்கு!''

''ஓ! நீ தீவிரவாதியா?''

''பூமி அதிபரின் நடவடிக்கைகள் பிடிக்கவில்லை. சரி... அதற்கு இந்த வான டாக்ஸியை தகர்த்துவிட்டால்? உங்களுக்கென்ன அரசியல் லாபம்?''

''ஒரு இரத்த எச்சரிக்கை அதிபருக்கு. அவ்வளவுதான்.''

''பாபன்! ப்ளீஸ்... நான் சொல்வதைக் கேள். இங்கே அமர்ந்திருக்கும் பயணிகளைப் பார். அவர்களின் முகங்களைப் பார். முகத்தில் எவ்வளவு பயண சந்தோஷம்? இலக்கு சேரும் நம்பிக்கை? அத்தனையும் பாழ் பண்ணிவிடாதே. தீவிரவாதம் கடந்த 125 வருடங்களாக ஏற்படுத்தி வரும் பாதகங்கள் புரியாதா உனக்கு? பூமி அதிபரின் மீது அதிருப்தி காட்ட நியாயமான வழிகள் நூறு உள்ளன. நீ விதைத்த பாம் வெடித்தால் ஏற்படும் பின்விளைவுகளை எனக்காகச் சற்றுநேரம் Virtual Reality Player ல் பார்!''

சிகரெட் பாக்கெட் அளவில் இருக்கும் ப்ளேயரில் ஒரு வானடாக்ஸியும் நூறு பயணிகளும் ஒரு பாபனும் ஒரு வியாஸும் உவாக்கினான் வியாஸ். கூடுதல் இணைப்பை பாபன் மணிக்கட்டில் இணைத்தான். முப்பரிமாணக்காட்சிகளும் ஒலிகளும் கைகோத்து 'மாய உண்மை'க் காட்சியை யதார்த்தத்தை விட விரைவாய் அமைத்தன.

வானடாக்ஸி வெடிப்பது - பயணிகளின் மரண ஓலமும் - பயணிகளின் இரத்த சொந்தங்களின் அவலங்களும் - ஜிப்ஷாவின் உலக துக்கமும் - பூமி அதிபரின் அதிர்ச்சியூட்டும் அலட்சியமும் - தீவிரவாதத் தலைவனின் சாடிஸ்டிகல் சந்தோஷமும் - பிறகிரக சகோதரர்களின் இரங்கலும் பாபனுக்குள் ஓடின.

''வியாஸ்! உன் பேச்சின் தர்க்க நியாயம், உணர்ச்சி நியாயம், வெர்ச்சுவல் ரியாலிட்டி பிளேயரின் அதிர்ச்சி நியாயம் என்னை லட்சம் வெட்டுக்கிளி படையெடுப்பாய்த் தாக்குகிறது. ஆனால் என்ன செய்ய? கிரவுண்ட் கண்ட்ரோலிடமிருந்து சமிக்ஞை வருகிறது - பாம் வெடிக்க இன்னும் 285 நொடிகளே அவகாசமென்று. பாமை செயலிழக்கச் செய்யும் திறன் என்னிடமில்லை....''

''என்னிடம் பாமைக்காட்டு - நான் முயற்சி செய்கிறேன்....''

''ஸாரி வியாஸ். பாம் வெளியில் இல்லை; என் வயிற்றுக்குள்...''

''வாட்?'' அதிர்ந்தான் வியாஸ்.

''உண்மையைக் கூற வேண்டிய தருணம் வந்துவிட்டது. நான் நிஜமான மனிதனல்ல. சண்டைப் பயிற்சிகள் தரப்பட்ட 'ஜுடாட்'வகை சைபோர்க் நான். அசைவுச் சுதந்திரங்கள் எனக்கு உண்டு. பிளாஸ்டிக் மண்டையோடு. அக்ரலிக் கண்கள். எலக்ட்ரானிக் தொண்டை. சுவாச வாசலில் ரத்தச் சுத்திக்காக பில்டரும் பேஸ்மேக்கரும்....'' வயிற்றுப் பகுதியைத் திறந்து காட்டியது பாபன். பாம் இரட்டை சிவப்பு வெளிச்சப் புள்ளிகளுடன் மினுக்கியது.

''பாபன்! ப்ளீஸ் ஹெல்ப் அஸ்....'' அழுதான் வியாஸ்.

''வெடிப்புக்கு இன்னும் நூறே நொடிகள். எப்படியிருந்தாலும் என் பௌதிக மரணம் தவிர்க்க முடியாதது. மரணபயம் எனக்கில்லை. கலத்தைக் காப்பாற்ற ஒரே ஒரு வழி இருக்கிறது. ஐ வில் டு தட்....'' எழுந்தது பாபன். ''நண்பா! ஜிப்ஷாவை விசாரித்ததாகக் கூறு!''

ஆபத்து வழி பொத்தான் அமுக்கி அதன் வழி கலத்தின் வெளியே பாய்ந்தது பாபன்.

ஆறுநொடிகள் தாமதத்தில் பாபன் வெடித்துச் சிதறியதை பைபர் கிளாஸ் ஜன்னலில் கண்டான் வியாஸ்.

''பாபன்! எங்களிடம் தொலைந்து போன உன் 'மனிதாபிமானத்துக்கு' கோடி நன்றி!'' முணுமுணுத்தான்.

# ஒரு மகாகவியின் சிதைந்த கனவு!

சிந்து நதியின் மிசை
செங்குருதி நீரோட்டம்;
சீக்கியர்தம் வாழ்வினிலே
'காலிஸ்தான்' போராட்டம்;
சேர, நன் னாட்டினிலே
சாதி, மதப் பேயாட்டம்;
காவிரிக் கரையினிலோ
கள்ளமது வெள்ளோட்டம்;

காவல் நிலையத்தில்
கற்பழிப்பு விளையாட்டு;
உயிர் காக்கும் மருத்துவரே
உயிர் வாங்கும் எமக்கூத்து;
உயிர் வாங்கும் பயனில்லை;
படித்தாலும் பயனில்லை;
பணமிருந்தால் தான் வேலை!
இனத்திற்கொரு சங்கம்
இந்தியனின் இயல்பாச்சு;

வருடம் தவறாமல்
வரிவிதிக்கும் 'பட்ஜெட்டு';
விண்வெளியில் கண்மறைவில்
விலைவாசி 'ராக்கெட்டு';
ஊழல் நாயகர்க்கு
ஊரெங்கும் 'கட் அவுட்டு';
நீதிக்கும் நேர்மைக்கும்
நிரந்தரமாய் வாய்ப்பூட்டு!

பகல் தூக்கக் கனவுகளைப்
பாடலாக்கிய பாரதியே
பாருக்குள் நன்னாடாம்;
பார்த்தாயா லட்சணத்தை!

– கே. சிவகுமார்.


✱ வி. கிருஷ்ணன்


✱ கோ. சிங்காரவேலன்


✱ எஸ். கோவிந்தராஜ்

●● கிராமத்தில் எங்களுக்கு வீடு, வாசல், சொத்து ஏதும் கிடையாது. என் தகப்பனார் அன்றாடம் இட்டிலி வியாபாரம் செய்து குடும்பத்தை நடத்தி வருகிறார். கடின உழைப்பு காரணமாக அவருக்கு உடல்நலமும் சரியில்லை. எனினும் நான் பள்ளியில் நான்காவதாக வந்து எஸ்.எஸ்.எல்.சி. தேர்ச்சி பெற்றுள்ளேன். என் கல்வியைத் தொடர உதவுமாறு வேண்டுகிறேன்.

- வி. கிருஷ்ணன், வத்ராயிருப்பு.

●● வறுமையில் உழலும் எங்கள் குடும்பத்தில் நான் ஒருவன்தான் பல்வேறு இன்னல்களுக்கு இடையில் கல்வி தாகம் எடுத்துப் பயின்று வருபவன். கஷ்டமான ஜீவனத்தில் குடும்பம் நடந்தாலும் சோதனைகளைத் தாங்கிப் படித்து வருகிறேன். இதுவரை நடந்த தேர்வுகளில் எப்பாடப் பிரிவிலும் தோல்வி அடையாது அனைத்திலும் முதல் வகுப்பில் வெற்றி பெற்று இப்போது கல்லூரியில் இளங்கலை கணிப்பொறி விஞ்ஞானம் படிக்கிறேன். இந்த ஏழை மாணவனுக்கு உதவித் தொகை வழங்கி அக்கமளியுங்கள்.

- கோ. சிங்காரவேலன், பூண்டி.

●● எனது குடும்பம் மிகவும் ஏழைமையானது. என் தந்தை டெலி ஃபோன்பூத் ஒன்று நடத்தி வருகிறார். வருமானம் நிலையற்றது. என் படிப்பைத் தொடர்வது ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. தங்கள் அறக்கட்டளையிலிருந்து எனக்கு உதவித் தொகை வழங்குமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

- எஸ். கோவிந்தராஜன், ஸ்ரீரங்கம்.

இம்மாதிரி உருக்கமான கடிதங்களுடன் விண்ணப்பங்கள் ஆயிரக்கணக்கில் ஆண்டுதோறும் குவிகின்றன. கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை நிறுவப்பட்டபோது முதல் ஆண்டில் ரூ 10,000/- உதவித் தொகை வழங்கியது. படிப்படியாக உயர்ந்து நடப்பு ஆண்டுக்கு ரூ 40,000/- அளிக்கிறது. மாணவர்கள் படிப்பில் சிறந்தவர்களாகவும் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும் இருக்க வேண்டும் என்பது மட்டுமே நிபந்தனை. இதற்குப் பள்ளி அல்லது கல்லூரி முதல்வர்களின் சான்றிதழ்கள் பெறப்படுகின்றன. அறங்காவலர்கள் கூடி விவாதித்து உதவித் தொகை பெற ஒவ்வொரு மாணவன் அல்லது மாணவியையும் கருத்துடன் தேர்ந்தெடுக்கின்றனர். வாழ்க்கையுடன் போராடி வெற்றி பெறத் துடிக்கும் இத்தகைய மாணவர்களுக்கு உதவும் ஆர்வம் உங்கள் உள்ளத்தில் எழுமானால் இயன்ற அளவு நன்கொடையைக் கல்கி நினைவு அறக்கட்டளைக்கு அனுப்பலாம்.

டிராஃப்ட் அல்லது எம்.ஓ. அல்லது காசோலை மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு மட்டுமே அனுப்புதல் வேண்டும். நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு.

விலாசம் :

**கி. ராஜேந்திரன்,**
**(நிர்வாக ஆசிரியர் : கல்கி)**
**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு**
**அறக்கட்டளை,**
**நெ. 1, ஐந்தாவது தெரு,**
**ஏரி வட்டம்,**
**நுங்கம்பாக்கம்,**
**சென்னை - 600 034.**



கல்வி பெற உதவுங்கள்!
வாழ்க்கை மலரச் செய்யுங்கள்!



# பாண்டியன் மகள்

## 25. கொலைக் கரங்கள்

கிருஷ்ணபட்சத்து நிலவின் பலவீனமான கதிர்கள் செடி கொடிகளினூடே பாய்ந்து ஒளி வட்டங்களும் புள்ளிகளும் கலந்த சித்திரங்களை வரைந்து கொண்டிருந்தன. கார்குழலியின் முகத்தில் விழுந்த நிலவொளி அவள் அகன்ற விழிகள் நன்றாக மலர்ந்திருப்பதைக் கண்டு, அவையும் மலர்களோ என்று எண்ணி மயங்கியது.

காட்டு மலர்களின் சுகந்தம் நிரம்பிய அந்த வனப்பகுதியின் காற்றை சுவாசித்ததாலும் புலன்கள் நன்கு மயக்கத்திலிருந்து விடுபட்டதாலும், கண்களையும் புத்தியையும் விழித்து நோக்கிய கார்குழலி, சலசலவென்று ஒலித்த நீரின் ஒலியையும் தான் ஒரு பலகையில் பிணைத்து வைக்கப்பட்டிருப்பதையும் உணர்ந்தாள். அப் பலகை ஆடிய ஆட்டத்தைக் கண்டு, வனத்தினூடே பாய்ந்த கால்வாயொன்றில் மிதந்த படகின் மேல் தளத்தில் தானிருப்பதைப் புரிந்து கொண்டாள். கண்ணெதிரில் பறந்த பூச்சிகளும் வண்டுகளும், எங்கோ ஒலித்த நரிகளின் ஓலமும் அந்த இடம் மனித சஞ்சாரம் அதிகமற்ற வனப் பகுதி என்பதை உறுதிப்படுத்தின. தலையை இயன்ற அளவு உயர்த்தியவள், சற்றிலும் நெருங்கி நின்ற மரங்களினூடே தொலைதூரத்தில் நிலவொளியில் அரைகுறையாக ஒரு கட்டடம் தெரியக் கண்டாள். சிரமத்துடன் உற்றுப் பார்த்து அது ஒரு புத்த விஹாரமென்பதையும் கண்டு கொண்டவள், தான் காஞ்சியிலும் உறையூரிலும் இருந்த போது கேள்விப் பட்டிருந்த புத்த விஹாரங்களின் வர்ணனைகளை நினைவுக்குக் கொண்டு வர முயன்றாள். சற்று நேர சிந்தனைக்குப் பின் அது புகழ்பெற்ற நாகையின் சூடாமணி விஹாரமாக இருக்கலாமென்ற எண்ணம் தோன்றியது அவளுக்கு. இதுபோன்ற வனப்பகுதிகளும் கால்வாய்களும் நாகையின் சுற்றுப்புறங்களில் அதிகம் என்றும் கேள்விப்பட்டிருந்தாள் அவள்.

அவள் சிந்தனையினூடே தூரத்திலிருந்து ஒலித்த பேச்சுக் குரல்கள் புகுந்தன. அந்த வனாந்திரத்தில் அவளைக் காப்பாற்ற எவருமில்லையென்பது புரிந்ததாலும், கூக்குரலிடுவதால் பயனில்லையென அறிவு எச்சரித்தாலும் கண்களை இறுக மூடி, புலன்களை முழு விழிப்பில் வைத்து, வருபவர் யாரென்பதை அறிய முயன்றாள்.

முதலில் கேட்டது அன்று அழகர் ஆலயத்தில் ஒலித்த மார்க்கியனின் கரகரத்த குரல். அஞ்சுவது பேதைமை என்பதை அறியாதவள் அல்ல அவள். ஆயினும் அவள் இதயம் பெரிதாக அடித்துக் கொள்ளத்தான் செய்தது. அவர்கள் நெருங்கிக் கொண்டிருந்தனர்.

இன்னொரு குரலும் இப்போது ஒலித்தது. ''மார்க்கியரே, ஈழத்தில் வீசும் சூறா





வளியின் தாக்கம், இந்த நாகையி லேயே இத்தனை பாதித்திருக் கிறதே, அலைகளைக் கவனித்தீர் களல்லவா? கொந்தளிக்கும் இந்த அலைகளை நமது படகு தாங்குமா? இதில் இந்தப் பெண்ணை வேறு அழைத்துச் செல்வது சாத்தியமா?''

மார்க்கியன் கேட்டான் . ''வேறென்ன வழி இருக்கிறது பொத்தகுட்டா?'' படகின் தளத் தில் வந்து நின்றனர் அவர்கள்.

பொத்தகுட்டன் என்று அழைக்கப்பட் டவன் கூறினான் : ''மார்க்கியரே, நாகைத் துறையில் கலங்கள் சில இருக்கின்றன. நமது வணிகர்களும் இருக்கிறார்கள். ஆனால் கடுமையான காவலும் சோதனை யும் அங்கே நடக்கிறது. இந்தச் சூறாவளி கடந்து சென்றபின் நமது படகில் பயணத் தைத் தொடர்வதே உசிதம்.''

சற்று நேர அமைதிக்குப் பின் மார்க் கியன் வினவினான் : ''இந்த இடம் பாது காப்பானதுதானா பொத்தகுட்டா?''

பொத்தகுட்டன் வேதாளம் சிரிப்பது போலச் சிரித்தான். ''கிக்கி'' என்ற அவன் நகைப்பு, கார்குழலியைச் சிலிர்க்க வைத் தது.

''மார்க்கியரே, இந்தப் படகு இங்கு பத்து நாட்களாக நிற்கிறது. எவராலும் இதை நெருங்க முடியாது. நாம் வந்த வழி முழுக்க சதுப்பு நிலம். அதோ தெரியும் தும் பைச் செடிகளின் வரிசையிலேயே சென் றால்தான் பிழைக்கலாம். சற்றுத் தவறி னாலும் புதை மணல் விழுங்கி விடும். எவரும் இங்கு வருவதில்லை. நீங்கள் அஞ்ச வேண்டாம்'' என்றான் அவன்.

''சரி பொத்தகுட்டா, நீயும் காளிங் கனும் இங்கேயே காவலிருங்கள். நான் துறைமுகத்துக்குச் சென்று ஏதேனும் செய்ய இயலுமா எனக் கண்டு வருகிறேன்'' என்ற மார்க்கியன், எழுந்து படகிலிருந்து இறங் கிச் செல்லும் ஒலி கேட்டது.

**கா**ற்றின் வேகம் வரவரக் கூடியது. வானம் கறுத்து நிலவை மேகங்கள் முழு வதுமாக மறைத்தன. கறுத்த மேகங்கள் பூதங்களைப் போல வடிவங்களை மாற்றிக் கொள்ள, காற்றில் குப்பென்று மண்வாச மும் காட்டு மலர்களின் வாசமும் கலந்து வந்தன.

பொத்தகுட்டன் உரக்கப் பேசினான் : ''காளிங்கா, சூறாவளி இந்தப் பக்கம் திரும் புகிறது. வா இவளைக் கீழ்த்தளத்திற்குக் கொண்டு கிடத்தி விட்டு அக்கரையிலிருக் கும் நமது மூட்டைகளை எடுத்து வந்து விட லாம்.'' இருவரும் எழுந்து வரும் காலடி ஓசை கேட்டது.

கார்குழலியைக் கட்டியிருந்த பிணைக் கயிறுகள் அவிழ்க்கப்படவில்லை. அந்த மரப் பலகையை அவளுடனே முன்னும் பின்னும் தூக்கியபடி கீழ்த்தளத்தை அடைந் தனர். தரையில் கிடத்தி விட்டு மறுபடி மேலே ஏறிச் சென்றனர்.

கண்களை மெல்லத் திறந்த கார்குழலி, கீழ்த்தளம் சிறு மர வீடு போலிருந்ததையும் நீரும் உணவும் சேமித்து வைக்கப்பட்டிருந் ததையும் ஆயுதங்கள் சில கீழே இறைந்து கிடப்பதையும் மங்கலாக எரிந்த ஒரு அகல் விளக்கொளியில் கண்டாள்.

திடீரென மேல்தளத்தில் படபடவென கற்களை எறிந்தாற்போன்ற ஓசையுடன் மழை பொழியத் தொடங்கியது. வானம் கிழிந்து கொட்டினாற்போல் பெய்த மழை யினாலும், சுழன்று வீசத் தொடங்கிய காற்றி னாலும், கால்வாயில் எழுந்த அலையினா லும் அந்தப் படகு பலமாக ஆடத் தொடங் கியது. விளக்கும் அணைந்து இருள் பர வியது.

கீழே எடுத்து வரப்பட்ட போது கயிற் றின் இறுக்கம் சற்று இளகியிருந்ததைக் கவனித்த கார்குழலி, அதன் பிணைப்பி லிருந்து வலது கையை லாகவமாக விடு வித்துக் கொண்டாள். அதற்குள் அந்த இரு வரும் தடதடவென கீழ்த் தளத்துக்கு இறங்கி வரும் ஒலி கேட்டது.

அசையாமல் கிடந்த கார்குழலியை அந்த இருளில் கவனியாத அவர்கள் மறு கோடியில் தாங்கள் சுமந்து வந்த மூட்டை களை இறக்கி விட்டு அமர்ந்து உணவருந்தத் தொடங்கினர். ''அப்பாடா! அகரப் பசி''

விஷ்வக்சேனன்

## அருள்வாக்கு

ஒரு வஸ்துவை நாம் பார்க்கிறோம் என்றால், பார்க்கப்படுகிற object என்றும், பார்க்கிறவனான subject என்றும் இரண்டு ஏற்பட்டு விடுகின்றன. நம் உடம்பை நம்மால் object ஆகத் தெரிந்து கொள்ள முடிகிறது. "என் உடம்பு நன்றாயிருக்கிறது; அல்லது நன்றாக இல்லை" என்று நாம் அதைப் பற்றித் தெரிந்து கொள்கிறோம் என்றால், அப்போது அது objectஆகி விடுகிறது. அதிலிருந்தும் வேறாக, 'நாம்' என்ற ஏதோ ஒன்று subjectஆக இருந்து கொண்டு, அதைப் பார்க்கிறது என்று ஏற்படுகிறது. அப்படிப் பார்ப்பது எதுவோ, அதுதான் ஆத்மா. இந்த subject-ஐ எதனாலும் தெரிந்து கொள்ள முடியாது. அப்படித் தெரிந்து கொள்ள முடிந்து விட்டால், அதுவும் object -ஆகி, அதைப் பார்க்கிற இன்னொரு subject-தான் நிஜ நாம் என்று ஆகி விடும். நிஜமான நாமான ஆத்மா subject ஆகத்தான் இருக்க முடியுமே தவிர objectஆகாது. எனவே சரீரம் முதலான objectகளைத் தள்ளி விட்டு, இந்த subjectஆக நாம் அநுபவத்தில் தனித்து இருந்து கொண்டுதான் இருக்க முடியுமே தவிர, அதை அறிந்து கொண்டு இருக்க முடியாது. அறிவது என்றால், இதைவிட இன்னொன்று, இதை objectஆக்கி ஆராய்ந்தால்தான் முடியும். ஆத்மாவின் விஷயத்தில் இது அபத்தம். ஆத்மாதான் 'நிஜமான நாம்'. அதை அறிய வேண்டும் என்றால், அப்படி அறிகிற வஸ்து ஆத்மாவுக்கு வேறானதாகத்தான் இருக்க வேண்டும். நம்

என்றான் ஒருவன்.

கார்குழலி மெல்லத் தன் இடதுகரத்தையும் விடுவித்துக் கொண்டாள். அசைவு ஏற்பட்டதால் அதுவரை கட்டப்பட்டிருந்த பகுதிகளில் கருகருவென்று ரத்தம் பாய்ந்து, ஊசிகள் கொண்டு குத்தினாற்போன்ற உணர்வு ஏற்பட்டது. கால்களையும் உடலையும் பலகையோடு சேர்த்துக் கட்டியிருந்த கயிறு இப்போது சற்று தளர்ந்திருந்தது. வாளை மீன் போல் அசைந்து அசைந்து பலகையை விட்டு மேற்புறமாக, சப்தமின்றி, படுத்தபடியே நகர்ந்து விடுதலை பெற்றாள். பெருத்த மழை அவளுக்கு உதவியது.

அந்த இருவருக்கும் பசி அதிகமாக இருந்திருக்க வேண்டும். விளக்கு அணைந்ததையும் பொருட்படுத்தாது வயிற்றை நிரப்பியே தீருவது என்று தீர்மானித்தவர்களாய் எதிரும் புதிருமாக அமர்ந்து உண்டனர். மூலிகை வேரை எரித்து உண்டாக்கிய புகையால் அவள் மயக்கத்தில் ஆழ்த்தப்பட்டிருக்கிறாள் என்பது தெரிந்ததால் அவர்கள் கவலையற்றிருந்தனர். மயக்கம் தெளிந்ததும் அவள் கூச்சலிடுவாள் என்றும் எண்ணியிருந்தார்கள்.

கார்குழலி கீழ்தளத்தின் சுவர் ஓரமாக நகர்ந்து, மெல்ல படிகளில் மேலேறிச் சென்று, படகைக் கரையுடன் இணைத்த பலகையைத் தேடினாள். வீசிய காற்றில் அந்தப் பலகை நகர்ந்து நீரில் விழுந்திருந்தது.

நீரைச் சரம் சரமாக மேகங்கள் பொழிந்து கொண்டிருந்த அந்த முன்னிரவில், ஊழிக்காற்றும் இடியும் மின்னலும் சேர, செய்வதறியாது சற்று நேரம் படகில் திகைத்து நின்ற கார்குழலி, பிறகு உறையூர் வைகுந்தனை மனதில் வணங்கிக் கொண்டு படகின் பக்கப் பலகை மீது ஏறி நீரில் பாய்ந்தாள்.

அந்தக் கால்வாயின் நீர் மட்டம் பெய்த பெருமழையில் உயர்ந்து விட்டிருந்ததால் முதலில் சற்று திணறியே போனாள். உள்ளே ஒருமுறை மூழ்கி எழுந்தவள், தலையை நீர்மட்டத்தின் மேலே கொண்டு வந்து காற்றை பலமாக உட்கொண்டாள். நீந்திக் கரை சேர்ந்து வழுக்கும் சேற்றில் கால்களைப் பதித்துத் தடுமாறியபடி ஏறினாள்.

படகின் கீழ்த்தளத்தில் இருளில் அமர்ந்து உணவருந்திக் கொண்டிருந்த இருவரும் தட்டென்று நீரில் ஏதோ விழும் சப்தம் கேட்டதும் அதுவரை காட்டிய அசட்டையை உதறி விட்டு எழுந்தனர். கார்குழலியைப் பிணைத்திருந்த பலகையை நெருங்க அவர்களுக்கு சற்றுமுன் கேட்ட ஒலியின் அர்த்தம் விளங்கியது.

மேல்தளத்துக்கு ஓடி வந்து இருளை ஊடுருவிய அவர்கள் பார்வைக்குக் கார்குழலி புத்த விஹாரத்தை நோக்கி ஓடுவது தெரிந்தது. பொத்தகுட்டன் நீரில் குதித்தான். அதிகமாகவே மது அருந்தியிருந்ததால் தடுமாறிய காளிங்கன், படகின் பக்கச் சுவர் விளிம்பின் மீது ஏறி நின்று தடுமாறி தலைகுப்புற நீரில் விழுந்தான். நீந்திக் கரையை அடைந்த பொத்தகுட்டன் திரும்பிப் பார்த்த போது காளிங்கனைக் காணாது ஒருகணம் திகைத்தான். மறுபுறம் வேங்கையிடமிருந்து தப்பிய மானைப் போல் கார்குழலி தும்பைச் செடிகளின் ஓரமாகவே

யில் நம்முடைய நிஜமான ஸ்வரூபத்துக்கு வேறாக என்ன இருக்க முடியும்? ஆத்மாவுக்கு அந்நியமாக அதை அறிய எது உண்டு? எதுவும் கிடையாது. அதனால், "ஆத்ம ஞானம்", "ஆத்மாவை அறிவது" என்ற வார்த்தைகளைச் சொன்னால் கூட, இங்கெல்லாம் ஞானம், அறிவது என்பதற்கு, ஒரு ஸப்ஜெக்ட் இன்னொரு ஆப்ஜெக்டை அறிகிறது என்று அர்த்தமில்லை. தன்னைத்தானே அநுபவித்துக் கொள்வதைத் தான், இந்த இடங்களில் 'ஞானம்' 'அறிவது' என்ற



வார்த்தைகளால் கட்டிக் காட்டுகிறோம். இதனால் தான் கேனோபநிஷத், "எவன் ஆத்மாவை அறிந்து விட்டேன் என்கிறானோ அவன் அறியவே இல்லை; எவன் அறியவில்லை என்ற நிலையில் இருக்கிறானோ அவன்தான் அறிகிறான். தெரியும் என்று நினைக்கிறவனுக்குத் தெரியாது; தெரியாது என்ற நிலையில் இருக்கிறவனுக்கே தெரிந்தது" என்கிறது. "கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்" என்று சொல்வதும் இதைத்தான்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

ஓடிச் சென்று கொண்டிருந்தாள். அது அவனுக்கு வியப்பு அளித்தபோதிலும் வியந்து நிற்க அது சமயமில்லை என்பதை அறிவு உணர்த்தவே, காலிங்கனைப் பற்றிய கவலையை விட்டுக் கார்குழலியின் பின் ஓடத் தொடங்கினான்.

செங்குத்தாக நீரில் பாய்ந்த காலிங்கனது சிரம் அம்பின் முனை போல கால்வாயின் அடிப்புறத்துச் சேற்றில் சென்று புதைந்தது. ஏறக்குறைய மூச்சு நின்று விடும் நேரத்தில் அவன் பெருமுயற்சி செய்து தன் தலையை சேற்றிலிருந்து விடுவித்துக் கொண்டான். விடுபட்டாலும் மூச்சுக் காற்றுக்காகத் தவித்த அவன், பரபரப்பில் நன்கு யோசியாது எம்பிய போது, படகின் கீழ்ப் பகுதி தலையில் தாக்கவே, இறுதி மூச்சையும் நீருக்குள்ளேயே விட நேர்ந்தது. கார்குழலியைத் தொடர்ந்து ஓடிய பொத்தகுட்டன் இதொன்றையும் அறியவில்லை.

விஹாரத்தை நெருங்கிய கார்குழலி அங்கு சிதறிக் கிடந்த கற்களையும் வெட்டப்பட்டு மழையில் நனைந்து கொண்டிருந்த பெரும் பாறைகளையும் கண்டு விஹாரத்தை விரிவுபடுத்தும் வேலை நடைபெற்றுக் கொண்டிருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டாள்.

பெரும் பாறையொன்றின் பின் சென்று பதுங்கியவள், மெல்லத் தலையைத் தூக்கிப் பார்த்தாள். பொத்தகுட்டன் மழையில் நனைந்தபடி ஓடி வருவது தெரிந்தது. பளிச்சிட்ட மின்னல் ஒளியில் அவன் கையிலிருந்த குறுவாள் பளபளத்தது!

கார்குழலியின் கையில் உடைந்த கருங்கல் ஒன்று நிரடியது. அதை மெல்ல எடுத்தவள், சட்டென்று எழுந்து நின்று அவன் தலைக்குக் குறிவைத்து முழு வேகத்துடன் வீசினாள். அரவம் கேட்டுத் திரும்பிய பொத்தகுட்டனின் தலைக்குச் சற்று மேலே பறந்து சென்றது அந்தக் கருங்கல்.

அவள் ஒளிந்திருந்த பாறையை நோக்கி பொத்தகுட்டன் அதிவேகமாகப் பாய்ந்தான். மீண்டும் கால்களுக்கு முழு வேகம் கொடுத்த கார்குழலி, விஹாரத்தின் வாசலை நோக்கி ஓடி இருளில் மறைந்தாள்.

பொத்தகுட்டன் இருளில் பாறைகளின் நடுவே அவளைப் பரபரப்புடன் தேடிக் கொண்டிருந்தான்.

மூச்சிரைக்கக் கார்குழலி விஹாரத்தின் வாயிற்கதவை அடைந்து, அதைப் பலமாகத் தட்டினாள். பெரு மழை காரணமாக, சாரலைத் தவிர்க்க அந்த விஹாரத்தின் கதவுகள் இறுக மூடிக் கிடந்தன.

அவள் கதவைத் தட்டிய ஒலி வெளியில் பாறைகளிடையே கார்குழலியைத் தேடிக் கொண்டிருந்த பொத்தகுட்டனின் செவிகளில் விழுந்தது.

கார்குழலி, அவன் தன்னை நோக்கித் திரும்பியதையும் விஹாரத்தின் வாயிலை நோக்கி வருவதையும் கவனித்து, கதவை இன்னும் பலமாகத் தட்டினாள்.

பொத்தகுட்டன் கையில் பிடித்த குறுவாளுடன் அவளை நெருங்கிக் கொண்டிருந்தான்.

படகுத் துறையிலிருந்து கிளம்பி நாகைத் துறைமுகத்துக்குச் சென்ற மார்க்கியனை மழையும் காற்றும் வழியிலேயே மறித்தன. அவற்றை எதிர்த்துக் கொண்டு ஒருவாறு நாகையை அடைந்து துறைமுகத்தை நெருங்கியதும் அந்த மழையிலும்

காற்றிலும் எந்தக் கலமும் பயணம் மேற்கொள்ளத் தயாராக இல்லை என்ற செய்தி கிடைத்தது அவனுக்கு. நண்பர்களான இரண்டொரு ஈழத்து வணிகர் கூறிய செய்தி அவனுக்கு மேலும் அதிர்ச்சியை அளித்தது. காஞ்சியிலும் மற்ற முக்கிய சோழ நகரங்களிலும் சந்தேகத்துக்கிடமான வேற்று நாட்டு வணிகர் அனைவரையும் உடனே வெளியேற்ற உத்தரவு பிறப்பித்திருந்தார் சோழப் பேரமைச்சர். சரிவர விசாரித்து பல சோதனைகளும் செய்த பின்னரே அவர்கள் கப்பலேற அனுமதிக்கப்பட்டனர்.

சோழ வீரர்கள் தருந்த அத்தாட்சிப் பத்திரங்களை வைத்திருப்பவர்களை மட்டுமே கலங்களில் ஏறவோ, இறங்கி உள்நாடு செல்லவோ அனுமதித்தனர். கடுமையான காவல் நிலவியது துறைமுகங்களில். நாகையில் அப்போதிருந்த இரு கலங்களும் நிரம்பி விட்டதால் அதற்கு மேல் பயணிகளை அனுமதிக்க இயலாதென்றும் வீரர்கள் அறிவித்தனர். அந்த இரு கலங்களும் புயல் அடங்கிய பின் பாய் விரிக்கக் காத்திருந்தன.

சோர்வுடன் துறைமுகத்தில் இங்குமங்கும் அலைந்த மார்க்கீயனது செவிகளில் அமுதமென விழுந்தன சில வார்த்தைகள். சோழ வீரன் ஒருவனது எரிச்சல் மிகுந்த சொற்கள், ஈழ வணிகன் ஒருவன் மீது பாய்ந்து கொண்டிருந்தன. ''ஐயா வணிகரே! இனி இந்தக் கலத்தில் இடமில்லை. இரு தினங்கள் பொறுத்திரும். மல்லைத் துறையிலிருந்து உங்கள் கலங்கள் நான்கு கிளம்பி விட்டன. அவற்றுள் ஒன்றில் நீங்கள் செல்லலாம்.''

அந்த வணிகனை இடித்துக் கொண்டு போன மார்க்கீயனைப் பக்கவாட்டில் கண்டுவிட்ட அந்தச் சோழ வீரன் முகத்தில் சந்தேகம் ஏதோ தோன்ற, எங்கோ விரைந்தான்.

''ஈழத்துக் கலங்கள் நான்கு வருகின்றனவா? நல்லது. படகில் சென்று அவற்றிலொன்றைக் கரையோரக் கடலிலேயே பிடித்து விட்டால் துறைமுகத்திற்கே வராமல் நேராக ஈழத்திற்குச் செலுத்துமாறு ஆணையிடலாம்.'' இவ்வாறு சிந்தித்தபடியே மார்க்கீயன் நடந்து இரவையும், மழையையும், காற்றையும் லட்சியம் செய்யாமல் படகு கட்டியிருந்த இடத்தைத் திரும்பவும் அடைந்தான். அங்கு பெரும் அதிர்ச்சி காத்திருந்தது. சற்றுத் தள்ளி மரத்தின் வேர்களில் சிக்கி மனித உடல் ஒன்று மிதந்தது. கரையோரம் போய் அவ்வுடலைத் திருப்பியவன் பிரமை பிடித்து நின்றான். காளிங்கனின் உயிரற்ற விழிகள் பரிதாபமாக அவனை வெறித்தன. இதனை மார்க்கீயன் காண்பதற்காகவே மேகம் சற்று விலகி நிலவை அனுமதித்தது போலிருந்தது!

மார்க்கீயனின் பழுப்பு விழிகளில் குரோதம் ஏறியது. பொத்தகுட்டன் என்னவானான் என்று கேட்டுக் கொண்டவன், படகில் தாவி ஏறி கீழ்த்தளத்தை அடைந்தான். கயிறுகளுடன் கிடந்த வெறும் பலகை நடந்த கதையைத் தெளிவாகவே கூறியது. சிதறிக் கிடந்த ஆயுதங்களிலிருந்து கூர்மையான வாளொன்றைத் தேர்ந்தெடுத்தவன் மீண்டும் மேல் தளத்துக்கு வந்தான். அவன் பார்வை தூரத்து புத்த விஹாரத்தின் மீது சென்றது. அருகில் மனித நடமாட்டமுள்ள ஒரே இடம் அதுதான். படகிலிருந்து நீரில் குதித்துக் கரையேறி, புத்த விஹாரத்தை நோக்கி வேகமாக நடந்தான் மார்க்கீயன்.

(தொடரும்)

"இந்தப் பாட்டு எங்கேயோ கேட்ட மாதிரி இருக்கே? எந்தப் படத்திலே?"

"மண்ணாங்கட்டி! இது நம்ம தேசிய கீதம்யா....!"

– சரோஜ் விஸ்வம்.





"இதோ.... பாருங்க.. இந்த நூறு ரூபாய் இப்ப உங்களோடதா இருக்கலாம்... அதுக்காக இந்த நோட்டுல.... ''ராமசாமியிடம் திருடியது''னு எழுதி வைக்கிறது நல்லாவா இருக்கு?''

- குடந்தை சுவீட் ரவி.

'காவியத் தலைவி' ஏற்படுத்திய எதிர்மறையான விளைவு இதுதான் :

அப் படத்தில் என் நடிப்பும் கதாபாத்திரமும் உச்சத்தைத் தொட்டிருந்ததால் அதற்குப் பிறகு வேறு படங்களுக்கு என்னை ஒப்பந்தம் செய்யவே யாரும் முன்வரவில்லை. 'காவியத் தலைவி'க்குப் பிறகு வேறு எதில் நடித்தாலும் அந்த இமேஜுடனும் அழுத்தமான கதாபாத்திரத்துடனும் தான் ரசிகர்களுக்கு என்னை ஒப்புநோக்கத் தோன்றும் - அப்படிச் செய்கையில் புதிய படத்தில் என் பர்ஃபார்மன்ஸ் சோடையாகத் தோன்றும் என்று தயாரிப்பாளர்களும் டைரக்டர்களும் கருதினார்களோ என்னவோ! அழுத்தமாகப் பதிந்து விட்டது. ரசிகர்கள் மனத்தில் கடைசியாக நான் நடித்த காவியத் தலைவியே நிலைத்து நிற்கும் என்பதால் இந்த நிலை ஓரளவுக்கு எனக்குச் சாதகமாகவே அமைந்து விட்டது.

இத்தனைக்கும், அப்படத்தை எடுக்க நான் முற்பட்ட போது, 'இவங்களுக்கு ஏன் இந்த வேண்டாத வேலை!' என்று விமர்சித்தவர்கள்தான் அதிகம்.

ஆனால், அப்படி விமர்சித்தவர்களே படம் வெளியானதும், 'அட! என்ன பிரமாதமாய்ப் பண்ணியிருக்காரு! சிம்ப்ளி சுபர்ப்...!' என்று இயக்குனர் பாலசந்தரைப் பாராட்டினார்கள். ஒரு சர்ச்சைக்குரிய கதையைத் துளியும் விரசமில்லாமல் கலைநயத்துடன் தமக்கே உரிய பாணியில் செய்திருந்தார் டைரக்டர் கே.பி.

# புதிய பரிமாணத்துக்குப் பிள்ளையார் சுழி!

'காவியத் தலைவி'யில் சிவாஜி கணேசனை ஹீரோவாக நடிக்க வைக்க விரும்பினோம். ஆனால் அவர் ரொம்ப பிஸியாக இருந்ததால் ஜெமினி கணேசனைப் போடலாம் என்று அபிப்ராயப்பட்டோம். ஆரம்ப காலம் முதலே எனக்கு ஒரு சகோதரரைப் போல் உறுதுணையாக நின்றவரல்லவா ஜெமினி கணேசன்! அவருக்கு, என் படத்தில் அற்புதமான ஒரு கேரக்டரில் நடிப்பதற்கு ஒரு வாய்ப்புக் கொடுக்க முடிந்தது எனக்குப் பெருமையாக இருந்தது. அவரிடமிருந்து மிகவும் யதார்த்தமான நடிப்பை வெளிப்படுத்தினார் பாலசந்தர். அது, ஜெமினிக்கு, தமிழ்நாடு அரசாங்கத்தின் சிறந்த நடிகருக்கான விருதைப் பெற்றுத் தந்தது.

காவியத் தலைவி கதை குறைந்த எண்ணிக்கையில் கேரக்டர்களைக் கொண்டிருந்ததால், நகைச்சுவை நடிகர்களில் மிகவும் சிறந்தவராக நான் கருதும் நாகேஷுக்கு ஏற்றதொரு கேரக்டர் அமையவில்லை. அப்படத்தின் முதல் ஷாட்டிற்கு கிளாப் அடித்தவர் நாகேஷ்தான்.

நடிகர் என்ற முறையில் மட்டுமின்றி ஒரு நல்ல மனிதர் என்ற முறையிலும் நாகேஷ் மீது எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. 78ல், பல காரணங்களுக்காக, நான் மனம் நொந்து சோர்ந்து போயிருந்த போது, ''இந்த மாதிரி மனசு தளர்ந்து போய், உங்களைப் பார்த்ததே இல்லை! நீங்க இப்படி இருக்கலாமா? இதுவரைக்கும் கடவுள் கிட்டே உங்கள் பங்கை நீங்க கேட்டதாகத் தெரியவில்லை! நீங்கதான் எஜுகேடட் ரௌடியாயிற்றே! அவரோட சண்டை போட்டு வாங்க வேண்டியதுதானே!'' என்று கேட்டார். இந்த வார்த்தைகள் எனக்குப் புதுத் தெம்பை அளித்தன.

இன்றும் நாகேஷின் அந்த வார்த்தைகளை நான் மறக்கவில்லை. பிரச்னைகள் வரும் போது, கடவுளுடன் போராடிக் கொண்டிருக்கிறேன்.

'காவியத் தலைவி'யில் எம்.ஆர். ராதாவை நடிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணமும் நிறைவேறவில்லை. அப்போது அவர் சிறையில் இருந்தார். அதனால் எம்.ஆர்.ஆர். வாசுவைத் தேர்ந்தெடுத்தார் டைரக்டர். வாசுவும் ராதா நடிக்காத குறையே தெரியாமல் சிறப்பாகச் செய்து விட்டார்.

படத்தின் வசனங்கள் ஏகமனதாகப்

பாராட்டுப் பெற்றன. ''தாய் என்பவள் வேறு எந்த ஒருவருடைய இடத்தையும் நிரப்பி விடுவாள்; ஆனால் அவளுடைய இடத்தை வேறு எவராலுமே நிரப்ப முடியாது'' என்ற வசனத்தைப் போல பல உதாரணங்கள் கூறலாம்.

கண்ணதாசனின் பாடல்கள், எம்.எஸ்.வி.யின் இசை, பாலகிருஷ்ணனின் காமரா என்று எல்லா அம்சங்களுமே 'காவியத் தலைவிக்கு'ப் பலம் சேர்த்தன. காவியத்தில் இடம்பெறத் தக்க பெருமை கொண்ட ஒரு பெண்ணின் கதைக்கு அப்படி ஒரு டைட்டிலைச் சூட்டியது பாலசந்தர்தான். சர்ச்சைக்குரிய காவியத் தலைவி படத்தை உருவாக்கியதில் எங்களுடன் மிகவும் ஒத்துழைத்தவர், பாலசந்தர் யூனிட்டில் முக்கியமானவரான அனந்து.

ஓடுமா? என்று பயந்து கொண்டே எடுத்த 'காவியத் தலைவி' நூறு நாட்கள் ஓடியது. என் நிஜவாழ்க்கையில் நடந்த சில சம்பவங்களுக்கும், கதையில் அந்தத் தாய் படும் சில கஷ்டங்களுக்கும் இருந்த ஒற்றுமை நான் அதிக ஈடுபாடு கொண்டு நடிக்கக் காரணமாய் அமைந்தது.

படத்தின் நூறாவது நாள் விழா மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. உட்லண்ட்ஸில் நடந்த விழாவுக்கு இந்தி நடிகர் அசோக்குமார் தலைமை தாங்குவதாக இருந்தார் - 'காவியத் தலைவி'யின் ஹிந்தி வடிவமான மம்தாவில் ஹீரோ அவர்தான். ஆனால் கடைசி நிமிஷத்தில் ஏற்பட்ட சில இடைஞ்சல்கள் காரணமாக அவரால் விழாவுக்கு வர இயலாமல் போய் விட்டது. ம.பொ.சி., ஏ.பி. நாகராஜன் ஆகியோர் கலந்து கொள்ள, விழா இனிதே நடந்தது.

**'கா**வியத் தலைவி' எனது வாழ்க்கையில் மட்டுமின்றித் தமிழ் சினிமா வரலாற்றிலும் ஏறத்தாழ திருப்புமுனை: பெண்மைக்கு முக்கியத்துவம் அளிக்கும் புரட்சிகரமான கதையம்சம் கொண்ட படங்கள் தமிழில் அதிகமாக வர ஆரம்பித்தது. 'காவியத் தலைவியை'த் தொடர்ந்துதான். குறிப்பாக, கே.பி., பெண்மைக்கு ஒரு புதிய பரிமாணம் கொடுத்துப் பல படங்களை எடுப்பதற்குக் 'காவியத் தலைவி'தான் பிள்ளையார் சுழி என்று சொல்லலாம்.

தமிழில் காவியத் தலைவியின் வெற்றியைத் தொடர்ந்து தெலுங்கில் அதை எடுக்க அல்லு அரவிந்த் என்ற தெலுங்குத் தயாரிப்

## சௌகார் ஜானகி



● 'காவியத் தலைவி' நூறாவது நாள் விழாவின் போது...

பாளர் உரிமையை வாங்கினாலும், அவர் எடுக்கவில்லை. ஆனால், காவியத் தலைவி கதையில் இடம்பெற்ற சம்பவங்கள் பல அதன்பின் தமிழ், தெலுங்கு, மலையாளப் படங்களில் புகுத்தப்பட்டு விட்டன. அப்போதுதான் காவியத் தலைவியின் முழு வீச்சை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

**நா**னே வலியப் போய் 'வாய்ப்புக் கொடுங்கள் எனக்கு' என்று கேட்கக் கூடாது என்கிற என் கொள்கையையும் மீறி, 68-ஆம் ஆண்டு ஜெமினி தயாரித்த ஒரு படத்தில், 'ஒரு குறிப்பிட்ட கதாபாத்திரத்தில், யாரை நடிக்க வைப்பது என்று நீங்கள் இன்னும் முடிவு செய்யவில்லை என்று அறிகிறேன். அப்படியென்றால், அந்தக் கேரக்டரில் நான் நடிக்க விரும்புகிறேன்' என்று அந்தப் படத்தின் ஹீரோவிடம் கேட்டேன்.

எனக்கு அந்தப் படத்தில் நடிக்கிற வாய்ப்பு கிடைத்தது. அதில் நான் பாடுவதாக வரும் பாடல் காட்சி, படம் ரிலீஸ் ஆன போது பெரிய ஹிட்! அது மட்டுமில்லை. பின்னர் ஒரு காலகட்டத்தில் தமிழக மக்களின் ஒட்டுமொத்த உணர்வுகளைப் பிரதிபலித்தது அந்தப் பாடல் என்பது அந்தப் பாடலுக்கு நிகழ்ந்த சற்றும் எதிர்பாராத பெருமை!

தமிழகமெங்கும் எதிரொலித்த அந்தப் பாடல்... கொஞ்சம் பின்னோக்கிச் சென்றால் நீங்கள் கண்டுபிடித்து விடுவீர்கள்.

(தொடரும்)

நீங்கள் இருப்பீர்கள் என்று மிகவும் ஆவலோடு வந்தேன். மதியம் மூன்று மணிக்கே அந்த ஆவல் பொங்கத் தொடங்கிற்று! லெபாரட்டரியில் இருப்புக் கொள்ளவில்லை. ஒவ்வொரு டெஸ்டியூப்பாய் உயர்த்திப் பிடித்து, நிறமாற்றம் பார்த்து, ரிசல்ட் குறித்து, கழுவிக் கவிழ்த்தினேன். குடுவை, ஆஸிட் என்று ஒவ்வொன்றாய் அப்புறப்படுத்தினேன். ஐந்தடித்ததும் ஓட்டமும் நடையுமாய் ஓடி வந்தேன். வாசலில் உங்கள் செருப்பைக் காணோம்! அப்பவே துவண்டு விட்டது!

எப்படி படபடப்பாய் ஓடி வந்தேன் தெரியுமா? வீட்டில் நீங்கள் இல்லை! வீடு முழுக்கத் தேடினேன். நீங்கள் தங்கியிருந்த அறை! மொட்டை மாடி! ஜன்னலுக்கு வெளியே தூரத்தில் இருக்கும் டீ கடை! ம்ஹூம் நீங்கள் இல்லை. நேராக நடுக் கூடத்தில் வந்து உட்கார்ந்தேன். என்னால் முடியவில்லை. நீங்கள் இன்று கிளம்பி விடுவீர்கள் என்று தெரியும்தான். ஆனால் இப்படி நான் வருவதற்குள் படியிறங்கி விடுவீர்கள் என்று நினைக்கவில்லை. எனக்கு உட்கார முடியாமலும் நகர முடியாமலும் தளதளவென்று படர்ந்திருக்கிற முள் பரப்பின் மீது உலாவுவது போல் ஒரு பதற்றம்!

கடைசியாக ஒரு சந்தேகம் வந்தது. ஒருவேளை நீங்கள் ஊருக்குப் போகவில்லையோ? இங்குதான் எங்கோ ஒளிந்து கொண்டு கண்ணாமூச்சி காட்டிக் கொண்டிருக்கிறீர்களோ என்று கூட எனக்குப் புருபுருத்தது. சொன்னால் சிரிக்க மாட்டீர்களே? எழுந்து போய் மர பீரோவை அகலத் திறந்தேன். ஒவ்வொரு அடுக்காய் உதறித் தேடிப் பார்த்தேன். நீங்கள் இல்லை. அந்த அறையின் மூலையில் என் பெட்டி இருந்தது. தகரப் பெட்டி. அதைத் திறந்து பார்த்தேன். என் சேலைகள், ஒவ்வொன்றாய் எடுத்து உதறிப் பார்த்தேன். உங்களைக் காணோம்!

எனக்குப் பரபரப்பாயிற்று! நிஜமாகவே நீங்கள் ஊருக்குத்தான் போய் விட்டீர்கள்! அப்படியே நீரை அள்ளி இறைத்துக் கொண்டு கத்தினாலும் அடங்கி விடாத பரபரப்பு! என் கை கால் எல்லாம் துவண்டு விட்டன.





# மனத்தின் நிறம்

**பாரதிபாலன்**

உங்களுக்குத் தெரியுமோ என்னவோ, என் படிப்பு முடிந்து மூன்று வருடம் ஓடிற்று! அப்புறம்தான் வேலை கிடைத்தது. 'நம்ம கெமிஸ்ட்ரி டிபார்ட்மெண்டில் ஒரு ரிசர்ச் அஸிஸ்டெண்ட் போஸ்ட் காலியாக உள்ளது. உனக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். உடனே வரவும்.' மேடத்திடமிருந்து கடிதம் வந்தது. உடனே குளித்து, தலை சீவி, பவுடர் போட்டு, உடை மாற்றி,





அத்தனை சர்டிபிகேட்டுகளையும் அள்ளி சூட்கேஸுக்குள் போட்டுக் கொண்டு அண்ணனிடம் சொல்லிக் கொண்டு, படியிறங்கி பஸ் பிடித்து, சிதம்பரம் வந்து யுனிவர்சிடி வாசலில் ஆட்டோவுக்குக் காத்திருந்து, டிபார்ட்மெண்ட் வாசல் வந்திறங்குவதற்குள் நான் அலைபாய்ந்தது எனக்குத்தான் தெரியும். அதை இப்போது நினைத்தாலும் சிலிர்க்கிறது! மாசம் ஆயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம். என் அளவுக்கு தாராளம்!

மேடத்தைப் பற்றி உங்களிடம் நான் சொல்லத் தேவையில்லை. என்னை விடக் கூட உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கலாம். கிட்டத்தட்ட ஐம்பதைத் தொட்டு விட்டார்கள். இன்னும் தனிமைதான். 'ஏன் லேட்டு?' என்று கேட்க ஆளில்லை. 'டிபன் ரெடியா?' என்று அதட்ட ஆள் இல்லை. அவர் காத்திருப்பாரே... காத்திருப்பாரே என்ற படபடப்பு இல்லை. 'நீங்கள் ஏன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை?' என்று இன்று வரை கேட்கத் தோன்றவில்லை. அசதி மறதியாய்க் கூட அந்த வார்த்தை வந்து விடவில்லை! தினசரி மணி போவது தெரியாமல் பேசி - இதைத் தவிர மீதியெல்லாம் பேசி - எதை எதையோ பேசிக் களைத்திருக்கிறோம். இன்று வரை நான் அது பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. தெரிந்துதான் என்னாகப் போகிறது!

மேடத்தைப் பார்க்கப் பார்க்க எனக்கு வியப்புத்தான் பீறிட்டது. இப்படிக் கூட முடியுமா? அணில் குட்டியை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு முதுகைத் தடவி விடுவது மாதிரி ஒருத்தியை ஆறுதலாய் நடத்த முடியுமா? நான் யார்? எனக்கும் அவங்களுக்கும் அப்படி என்ன ஒட்டு? ஏன் இப்படி உருகி உருகிப் பண்ணுவானேன்? தாய்-மகள் உறவாய் எங்கள் நெருக்கம் தழைக்கிறது. பார்க்கிற கண்களில் முள் வைத்து முடுக்கியது மாதிரி குத்துகிறதோ என்னவோ! தலைக்குத் தலை ஏதாவது சொல்லிக் கொண்டு தான் திரியுதுக. "அவ இன்னி வரை கல்யாணம் பண்ணிக்கலெ. ஆர்க. அவள் வாழ்க்கையும் ஒரு வழியா முடியப் போவுது. இன்னைக்கு வரைக்கும் பெரிய 'இது' மாதிரி திண்ணைக்கமாத் திரியுறா, அவள் கூடச் சேர்ந்து நீயும் ஒண்ணுமில்லாத போயிடாத!" இது எச்சரிக்கையா? இல்லை எரிச்சலா? எப்படியோ போகட்டும். ஐ டோண்ட் கேர்!

இதையெல்லாம் நான் ஏன் உங்களிடம் சொல்லுகிறேன்? எத்தனை 'பார்வை' என்னைச் சுற்றிக் கொண்டிருக்



"பீச்சுக்குப் போக பத்து நிமிஷம் லேட்டாயிடுச்சு!"

"அதுக்குன்னா உன் காதலர் கண்டல் வாங்கிட்டாரா?"

"இல்லை... புதுக் காதலியையே புடிச்சுட்டார்!"

- அம்பை தேவா.

கிறது என்பதற்காகச் சொல்கிறேன். இன்னொன்றும் உங்களிடம் சொல்ல வேண்டும். 'சொல்ல வேண்டும்; சொல்ல வேண்டும்' என்று சொல்லாமலே விட்டு விட்ட சங்கதி! என் கூட ஒருவன் வேலை செய்கிறான். லேப் அஸிஸ்டெண்ட். பார்ப்பதற்கு நன்றாகத்தான் இருப்பான். என்னிடம் வழிய வழிய வந்து குழைவான். ஜோக் அடிக்கிறேன் பேர் வழி என்று எதையாவது பிதற்றுவான். ''எதுனா ஹெல்ப் பண்ணனுமா?'' என்று படபடப்பான். நானும் ஜோவியலாக எடுத்துக் கொண்டுதான் பழகுவேன். ஒரு நாள் லெபாரட்டரியில் ஒருவருமே இல்லை. இரண்டு டெஸ்டிடியூப்பில் ஆஸிட்டை நிரப்பிக் கொண்டு என்னை நெருங்கி வந்தான். என் தோளோடு தோள் உரசுகிற நெருக்கம். ''என் ரூமுக்குப் போகலாமா? யாருமில்லை!'' என்று என் காதில் விழுந்தும் விழாததுமாக உதடு நடுங்க ஏதோ சொன்னான். 'என்ன?' என்று திரும்பி ஒரு பார்வை! அவ்வளவுதான். நகர்ந்து விட்டான்.

எனக்கு ஆத்திரமாக வந்தது. எல்லா ஆம்பிளைங்களுமே இப்படித்தானா? எல்லாப் பார்வையிலும் ஒரு விரசம் ஒளிந்திருக்கா? இவளுக்கு இருபத்தியெட்டு வயசு ஆச்சு. இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்றவுடன் புத்தி குறுக்கே பாய்கிறது. சுலபமாய்க் கவுத்துடலாம் என்ற நினைப்பு. கை வெச்சாப் போதும் ஆள் விழுந்திடும் என்ற கர்வம்!

ஏன் இப்படி நினைக்கிறார்கள்! மனித உணர்வுகளைப் புரியாமல், அகப்பட்டது வரை லாபம் என்ற மிருக குணம்தானே இது! ச்சை! என்ன புத்தி இது? நிஜமாகவே அவன் அப்படிக் கேட்டதிலிருந்து எனக்கு ஒரு பொட்டுத் தூக்கமில்லை. தெரியுமா? தளதளவென்று கொதிக்கத் தொடங்கிற்று! தாள முடியாமல் நான் தவித்தேன். தூங்கும் போது, விடியற்காலை, எழும் போது என்று எல்லா நேரமும் ஜிவுஜிவு என்று பொங்கிற்று! எனக்கு வலி இல்லாமல், எனக்கு இடையூறாக இல்லாமல் என் இருபத்தியெட்டு வயது என் தலையில் பாரமாக நிற்கிறது.

அந்தத் தவிப்பின் இடையில்தான் உங்களைச் சந்தித்தேன். நீங்கள் எப்படியோ என்று எண்ணவில்லை. பரீட்சித்துப் பார்க்க வேண்டும் என்ற நினைப்பே எழவில்லை. காரணம் உங்கள் முகம். அதிராத உங்கள் பேச்சு. எதற்கும், எதன் பொருட்டும் எவரையும் நோகடிக்காத பஞ்சு மனசு! எனக்கு உங்களைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும். உங்களோடு பேசினால் போதும். அதுவே நிம்மதி என்று தோன்றியது. ஏன் தெரியுமா? உங்கள் முகம் அப்படி! உங்கள் நடத்தையின் மூலம் உங்கள் மனசைப் படித்து விட்டது மாதிரி எனக்கு ஒரு தெளிவு! மேடம் இருக்கும்போதே நான் உங்கள் எதிரில் வந்து நிற்பேன். பயமாகக் கூட இருக்கும். மேடம் ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்களோ என்ற பயம்! ஆனால் அந்தப் பயம் காரணமாக ஒதுங்கி நிற்க முடியவில்லை. உங்கள் அருகில் போய்ச் சேர்ந்து விட வேண்டும் என்றே உந்துதல். எனக்கு இன்னும் பச்சைப் பசேல் என்று ஞாபகமிருக்கிறது. நீங்கள் மேடத்தைச் சந்திக்க லாபுக்கு வந்த அந்த முதல் தினம். ஐந்து நிமிடத்திற்கு ஒரு வார்த்தை. யோசனை பண்ணி, யோசனை பண்ணி பேசிக் கொண்டிருந்தீர்கள். மேடம் உங்களைத் தொட்டுத் தொட்டுப் பேசிக் கொண்டிருந்தார்கள். நீங்களும் குழந்தை மாதிரி குழந்தை இப்படியும் அப்படியுமாய் ஆட்டிக் கொண்டிருந்தீர்கள். நீங்கள் போன பின்பு மேடம் உங்களைப் பற்றிச் சொன்னார்கள். மூன்று நாட்கள் உங்கள் பேச்சுத்தான். எதற்கெடுத்தாலும் உங்களைப் பற்றித்தான் பேச்சு! நீங்கள் அண்ணாமலையில் படிக்கும்போதே அவர்களுக்குத் தெரியுமாம். நீங்கள் கதை, கட்டுரை எல்லாம் எழுது வதாகச் சொன்னார்கள். எங்கோ தேடிக் கண்டுபிடித்து பழைய கணையாழியையும், கல்கியையும் பிரித்துக் காட்டினார்கள். என் மனசுக்குப்பட்டது ஒன்றைச் சொல்லட்டுமா? நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது! நீங்கள் பாதித்த அளவுக்கு உங்கள் கதையோ கட்டுரையோ என்னைப் பாதிக்க வில்லை என்பதுதான் நிஜம்!

ஒவ்வொரு நாள் விடிகிறபோதெல்லாம் காலிங் 'பெல்' ஒலிக்காதா என்று ஒரு நினைப்பு! நான் தவறினாலும் உங்கள் நினைப்பு வரத் தவறாது. உங்கள் கண்ணையும் முகத்தையும் பார்த்தால் எனக்குப் பரவசம். உங்கள் நினைவு என்னைக் கடக்கிறபோதெல்லாம் ஒரு கதகதப்பு! - இதைச் சமாளிக்க நான் பட்டபாடு இருக்கிறதே! யப்பா மூன்று நான்கு மாதம் உங்களைப் பார்க்க முடியவில்லை. 'வருவீர்கள், வரு

வீர்கள்' என்று தவித்ததுதான் மிச்சம்! முடியாமல்தான் உங்களுக்கு எழுதினேன். அந்த வேலை இருக்கு! இந்த வேலை இருக்கு என்று ஏதோ சாக்குப் போக்குச் சொன்னீர்கள். எங்கோ டூர் என்றீர்கள். 'திரும்பி வந்ததும் வாருங்கள்' என்று எழுதினேன். நீங்கள் வருவதற்கும் மேடம் செமினார் என்று சூட்கேஸை நிரப்பிக் கொண்டு கிளம்புவதற்கும் சரியாக இருந்தது.

நீங்கள் என்னோடு இருக்கப் போகிறீர்கள் - நாம் மட்டும் தனியாக இருக்கப் போகிறோம் என்ற பரவசத்தில் என்னை மீறி நான் ஏதேதோ பேசித் தீர்க்கிற மூர்க்கத்தில் இருந்தேன். 'இன்னும் முழுசாய் இரண்டு நாள் சாவகாசம் இருக்கிறதே' என்று புன்சிரிப்புச் சிரித்தீர்கள். பரிகாசச் சிரிப்பு! ''பரவாயில்லை இன்னொரு சமயம் பேசிக்கிடலாம்'' என்று எத்தனை விஷயங்களை ஒதுக்கிச் சமாளித்திருக்கிறேன் தெரியுமா?

மூன்று நாட்களுக்குப் பின் நீங்கள் போய் விட்டீர்கள். ஆனால் நம் விஷயம் மேடத்திற்கு தெரியாமலா இருக்கும்? கிசுகிசுக்கள்; சில சின்னஞ்சிறு சாட்சியங்கள். நீங்கள் இல்லாத போது என் தடுமாற்றம், உங்கள் கடிதத்தை படித்துப் படித்து நான் பத்திரப்படுத்துவது எதுவுமே தெரியாமலா இருக்கும்?

சட்டென்று அவர்களிடம் ஒரு மாற்றம். என்னிடமிருந்து விலகத் தொடங்கினார்கள். நெருக்கம் போய் விட்டது. நான் வருந்தினாலும் கவலைப்படவில்லை. 'எனக்குத்தான் நீங்கள் இருக்கிறீர்களே' என்ற ஆறுதல்... இல்லை, நிறைவு. அந்த நம்பிக்கையில்தான் ஒரு மாதம் சென்று நீங்கள் மறுபடி வந்த போது நான் உங்களிடம் அப்படிக் கேட்டேன் : 'எத்தனை நாளைக்குத்தான் பதுங்கிப் பதுங்கி உள்ளுக்குள்ளே ஏங்கித் தவித்துக் கொண்டிருக்க முடியும்? உங்கள் நினைவிலே நான் நினைவிழந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் எனக்கு அவசியமாகி விட்ட ஒரு நிலையில்தான் நான் கேட்கிறேன் ; நீங்கள் எப்போது என்னை ஏற்றுக் கொள்ளப் போகிறீர்கள் - நம் கல்யாணம்?' நான் இப்படிக் கேட்டதும் சட்டென்று உங்கள் முகத்தில் கருமை ஏறியதைக் கவனித்து விட்டேன்.

நீங்கள் உட்கார்ந்திருந்த நாற்காலியின் முன்னங்கால் பரப்பில் என் சேலை நுனி சிதறிக் கிடந்தது. என் சேலை மீது உங்கள் கால் இருக்கிறது. நான் இதைக் கேட்டதும் உங்கள் கால் என் சேலையிலிருந்து மெல்ல நழுவிற்று! இது யதேச்சையாக நடக்கவில்லை என்பதும் எனக்குத் தெரியும். ஒவ்வொரு கணமும் நுட்பமாய் விழித்துக் கொண்டிருப்பவர் நீங்கள்! ஊரின் வாய்க்கு நம் கோழைத்தனம் அவலாகி விடக்கூடாது! இது உங்களுக்குப் புரியும் என்று நம்பினேன். அதனால்தான் கேட்டேன்.

நீங்கள் இப்படி சொல்லிக் கொள்ளாமல் போனது எனக்கு வலிக்கிறது! இந்த நிமிஷம் வரை வலித்துக் கொண்டுதான் இருக்கிறது! எப்படி உங்களால் முடிந்தது? நான் உங்களிடம் அப்படிக் கேட்டது பிசகா? என்னால் இதற்கு மேலும் கடத்திக் கொண்டு போக முடியவில்லை. இப்போது ஏன் கேட்டோம் என்று கூடத் தோன்றுகிறது! நெஞ்சைத் தாக்கும் ஒரு வெறி. கேட்டு விட்டேன். ஆனால் இப்போது நீங்கள் இல்லாத இந்த சூன்யத்தின் வலியைத் தாங்க முடியவில்லை. எதையோ தொலைத்து விட்டுத் தேடுகிற தவிப்பில் இருக்கிறேன். நேரம் எப்படியோ நகர்ந்து இருள் விழுந்தது. நான் நீங்கள் படுத்திருந்த ஜன்னலுக்குப் பக்கத்தில் பாய் போட்டேன். வெகுநேரம் வரையிலும் என்னால் தூங்க முடியவில்லை! கண்ணில் முள் வைத்துக் கட்டினது மாதிரி இருந்தது. இப்படியும் அப்படியுமாய்ப் புரண்டு கொண்டிருந்தேன். ரேழிக்கு முன்னால் கொடியில் உங்கள் துண்டு! அரை இருட்டில் மிதந்து கொண்டிருந்தது. எல்லாவற்றையும் அள்ளிக் கொண்டு போன நீங்கள் இதை மட்டும் எப்படியோ மறந்து விட்டுப் போயிருக்கிறீர்கள்! இல்லை. மறக்காமல் விட்டுப் போயிருக்கிறீர்கள்! எழுந்து போய் உங்கள் துண்டை எடுத்தேன். தண்ணீர்த் தொட்டிக்குள் முக்கி இறுக்கிப் பிழிந்து போர்த்திக் கொண்டு படுத்தேன். எப்போது தூங்கினேன் என்று தெரியாமலே தூங்கிப் போனேன்.

காலையில் எழுந்த போது திடும்மென்று ஒரு தெளிவு பிறந்தது. என்ன தோன்றியது தெரியுமா? லாபில் என்னை நெருங்கி வந்து, தோளொடு தோள் உரசுகிற மாதிரி நின்று, 'என் ரூமுக்குப் போகலாமா? யாருமில்லை?' என்று கேட்டானே, உங்களை விட அவன் எவ்வளவோ தேவலாம், அட்லீஸ்ட் அவன் ஏமாற்ற நினைக்கலை என்றுதான்!

''தலைவி ஏன் கோபத்தோட உட்கார்ந்திருக்காங்க?''

''கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தவர் தலைவி உரையாற்றுவார்னு சொல்றதுக்குப் பதிலா 'தலைவலி' உரையாற்றுவார்னு சொல்லித் தொலைச்சுட்டாராம்!''

- சீர்காழி சாமா.



வீர்கள்' என்று தவித்ததுதான் மிச்சம்! முடியாமல்தான் உங்களுக்கு எழுதினேன். அந்த வேலை இருக்கு! இந்த வேலை இருக்கு என்று ஏதோ சாக்குப் போக்குச் சொன்னீர்கள். எங்கோ டூர் என்றீர்கள். 'திரும்பி வந்ததும் வாருங்கள்' என்று எழுதினேன். நீங்கள் வருவதற்கும் மேடம் செமினார் என்று சூட்கேஸை நிரப்பிக் கொண்டு கிளம்புவதற்கும் சரியாக இருந்தது.

நீங்கள் என்னோடு இருக்கப் போகிறீர்கள் - நாம் மட்டும் தனியாக இருக்கப் போகிறோம் என்ற பரவசத்தில் என்னை மீறி நான் ஏதேதோ பேசித் தீர்க்கிற மூர்க்கத்தில் இருந்தேன். 'இன்னும் முழுசாய் இரண்டு நாள் சாவகாசம் இருக்கிறதே' என்று புன்சிரிப்புச் சிரித்தீர்கள். பரிகாசச் சிரிப்பு! ''பரவாயில்லை இன்னொரு சமயம் பேசிக்கிடலாம்'' என்று எத்தனை விஷயங்களை ஒதுக்கிச் சமாளித்திருக்கிறேன் தெரியுமா?

மூன்று நாட்களுக்குப் பின் நீங்கள் போய் விட்டீர்கள். ஆனால் நம் விஷயம் மேடத்திற்கு தெரியாமலா இருக்கும்? கிசுகிசுக்கள்; சில சின்னஞ்சிறு சாட்சியங்கள். நீங்கள் இல்லாத போது என் தடுமாற்றம், உங்கள் கடிதத்தை படித்துப் படித்து நான் பத்திரப்படுத்துவது எதுவுமே தெரியாமலா இருக்கும்?

சட்டென்று அவர்களிடம் ஒரு மாற்றம். என்னிடமிருந்து விலகத் தொடங்கினார்கள். நெருக்கம் போய் விட்டது. நான் வருந்தினாலும் கவலைப்படவில்லை. 'எனக்குத் தான் நீங்கள் இருக்கிறீர்களே' என்ற ஆறுதல்... இல்லை, நிறைவு. அந்த நம்பிக்கையில்தான் ஒரு மாதம் சென்று நீங்கள் மறுபடி வந்த போது நான் உங்களிடம் அப்படிக் கேட்டேன் : 'எத்தனை நாளைக்குத்தான் பதுங்கிப் பதுங்கி உள்ளுக்குள்ளே ஏங்கித் தவித்துக் கொண்டிருக்க முடியும்? உங்கள் நினைவிலே நான் நினைவிழந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் எனக்கு அவசியமாகி விட்ட ஒரு நிலையில்தான் நான் கேட்கிறேன் ; நீங்கள் எப்போது என்னை ஏற்றுக் கொள்ளப் போகிறீர்கள் - நம் கல்யாணம்?' நான் இப்படிக் கேட்டதும் சட்டென்று உங்கள் முகத்தில் கருமை ஏறியதைக் கவனித்து விட்டேன்.

நீங்கள் உட்கார்ந்திருந்த நாற்காலியின் முன்னங்கால் பரப்பில் என் சேலை நுனி சிதறிக் கிடந்தது. என் சேலை மீது உங்கள் கால் இருக்கிறது. நான் இதைக் கேட்டதும் உங்கள் கால் என் சேலையிலிருந்து மெல்ல நழுவிற்று! இது யதேச்சையாக நடக்கவில்லை என்பதும் எனக்குத் தெரியும். ஒவ்வொரு கணமும் நுட்பமாய் விழித்துக் கொண்டிருப்பவர் நீங்கள்! ஊரின் வாய்க்கு நம் கோழைத்தனம் அவலாகி விடக் கூடாது! இது உங்களுக்குப் புரியும் என்று நம்பினேன். அதனால்தான் கேட்டேன்.

நீங்கள் இப்படி சொல்லிக் கொள்ளாமல் போனது எனக்கு வலிக்கிறது! இந்த நிமிஷம் வரை வலித்துக் கொண்டுதான் இருக்கிறது! எப்படி உங்களால் முடிந்தது? நான் உங்களிடம் அப்படிக் கேட்டது பிசகா? என்னால் இதற்கு மேலும் கடத்திக் கொண்டு போக முடியவில்லை. இப்போது ஏன் கேட்டோம் என்று கூடத் தோன்றுகிறது! நெஞ்சைத் தாக்கும் ஒரு வெறி. கேட்டு விட்டேன். ஆனால் இப்போது நீங்கள் இல்லாத இந்த சூன்யத்தின் வலியைத் தாங்க முடியவில்லை. எதையோ தொலைத்து விட்டுத் தேடுகிற தவிப்பில் இருக்கிறேன். நேரம் எப்படியோ நகர்ந்து இருள் விழுந்தது. நான் நீங்கள் படுத்திருந்த ஜன்னலுக்குப் பக்கத்தில் பாய் போட்டேன். வெகுநேரம் வரையிலும் என்னால் தூங்க முடியவில்லை! கண்ணில் முள் வைத்துக் கட்டினது மாதிரி இருந்தது. இப்படியும் அப்படியுமாய்ப் புரண்டு கொண்டிருந்தேன். ரேழிக்கு முன்னால் கொடியில் உங்கள் துண்டு! அரை இருட்டில் மிதந்து கொண்டிருந்தது. எல்லாவற்றையும் அள்ளிக் கொண்டு போன நீங்கள் இதை மட்டும் எப்படியோ மறந்து விட்டுப் போயிருக்கிறீர்கள்! இல்லை. மறக்காமல் விட்டுப் போயிருக்கிறீர்கள்! எழுந்து போய் உங்கள் துண்டை எடுத்தேன். தண்ணீர்த் தொட்டிக்குள் முக்கி இறுக்கிப் பிழிந்து போர்த்திக் கொண்டு படுத்தேன். எப்போது தூங்கினேன் என்று தெரியாமலே தூங்கிப் போனேன்.

காலையில் எழுந்த போது திடும் மென்று ஒரு தெளிவு பிறந்தது. என்ன தோன்றியது தெரியுமா? லாபில் என்னை நெருங்கி வந்து, தோளோடு தோள் உரசுகிற மாதிரி நின்று, 'என் ரூமுக்குப் போகலாமா? யாருமில்லை?' என்று கேட்டானே, உங்களை விட அவன் எவ்வளவோ தேவலாம், அட்லீஸ்ட் அவன் ஏமாற்ற நினைக்கலை என்றுதான்!

''தலைவி ஏன் கோபத்தோட உட்கார்ந்திருக்காங்க?''

''கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தவர் தலைவி உரையாற்றுவார்னு சொல்றதுக்குப் பதிலா 'தலைவலி' உரையாற்றுவார்னு சொல்லித் தொலைச்சுட்டாராம்!''

- சீர்காழி சாமா.



# சக்கரவர்த்தித் திருமகன்



## 43. பத்து ஆண்டுகள் கழிந்தன!

இப்போது ஆரம்பிப்பது அரண்ய காண்டம். சீதைக்கு ஏற்படப்போகும் விபத்துக்கு, கவி நம்மை ஆயத்தப் படுத்துகிறார். தண்டகாரண்யத்தில் சக்கரவர்த்தித் திருமகனுக்கு ஒரு புதுக் கடமை ஏற்பட்டு விட்டது : ரிஷிகளைத் துன்புறுத்தும் அரக்கர்களைக் கொல்லும் கடமை. வரப் போகும் கஷ்டத்தின் சூசனையாகச் சீதையின் மனத்தில் ஒரு பயம் தோன்றிற்று.

''வனவாசத்தில் இந்த க்ஷத்திரிய காரியத்தைத் தபசிகளான நாம் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? நாம் வந்தது தந்தையின் ஆணையை நிறைவேற்ற. அவர் வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதற்காக வனவாசம் வந்தோம். ரிஷிகளைக் காப்பாற்றும் கடமை நாட்டையாளும் அரசனுடையது. மக்களைத் தொந்தரவு படுத்தும் ராக்ஷசர்களைத் தண்டிப்பது பொதுவாக க்ஷத்திரிய தருமமானாலும், அது சிம்மாசனம் ஏறிய அரசனுடைய கடமை. நாமோ தவமிருக்க வந்திருக்கிறோம். அரக்கர்களைக் கொன்று ரிஷிகளைக் காப்பது நம்முடைய கடமையாகாது. நம்மை எதிர்க்க வராதவர்களைக் கொல்லுவது வனவாச விரதத்துக்கும் விரோதமாகும். இங்குள்ள ரிஷிகளுக்கு நீங்கள் வாக்குறுதி கொடுத்து விட்டீர்கள். 'ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் அரக்கர்களை நான் வதம் செய்வேன்' என்று பிரதிக்ஞை செய்து விட்டீர்களே? இது நம்மை எங்கே கொண்டுபோய் விடுமோ, தெரியவில்லை.''

இவ்வாறு சீதை ராமனுடன் பிரியமான மொழிகளில் வாதம் செய்தாள். சுதீக்ஷண முனிவருடைய ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு தண்டகாரண்யத்திலுள்ள மற்ற ரிஷிகளுடைய ஆசிரமங்களுக்குப் போகும்போது இதைப் பற்றிப் பேசிக் கொண்டே சென்றார்கள்.

''என் நாதனே! எதிர்த்துப் பேசுகிறேனே என்று கோபிக்க வேண்டாம். பெண்ணாகிய எனக்குத் தோன்றுவதைச் சொல்கிறேன். எது தருமம் எது கடமை என்பது உங்களுக்குத் தெரியும். ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். ஆசையினால் தூண்டப்பட்டு மக்கள் செய்யும் பெரும் பாவங்கள் மூன்று என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பொய் பேசுவது, பரஸ்திரீயைத் தீண்டுவது, நம்மை எதிர்த்துத் தீங்கு செய்யாதவர்களைத் துன்புறுத்துவது. இம்மூன்றில் பொய் என்பது உங்களிடம் அண்டாது. சத்தியத்தைக் காக்க ராஜ்யாதிகாரத்தையும் போகங்களையும் விட்டு விட்டு இங்கே வனவாசம் செய்கிறீர். என் பிரிய நாதனே! பரஸ்திரீயை மனத்தில் கூட நினைக்க மாட்டீர் என்பது எனக்குத் தெரியுமல்லவா? இப்போது நான் பயப்படுவது மூன்றாவது விஷயத்தைப் பற்றித்தான். அதாவது நம்மை எதிர்க்காத ஒருவனை நாம் வதம் செய்யலாமா என்பது. ராக்ஷசர்களாயினும் யாராயினும் நம்மை எதிர்க்க வராதவர்களை நாம் ஏன் கொல்ல வேண்டும்? அவசரப்பட்டு இந்த வனத்தில் வசிக்கும் முனிவர்களுக்கு வாக்குக் கொடுத்து விட்டீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. தீயவர்களை அழிப்பது க்ஷத்திரிய தர்மமே. ஆனால் நாம் வனவாசத்தில் அந்தத் தர்மத்தை அனுசரிப்பது சரியல்ல. அரச பதவியிலிருப்பவர்களுக்கல்லவா அந்தக் கடமை சேர்ந்தது? மரவுரி உடுத்தித் தலைமயிரை ஜடையாக்கி, விரத வேஷம்

ராஜாஜி

பூண்ட உங்களுக்கு இந்தக் கடமை எப்படி ஏற்படும்? இது வேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றில்லை. என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். யோசித்துச் செய்யவும்'' என்றாள் ஜானகி.

இவ்விதம் சந்தேகப்பட்டுப் பேசிய சீதையிடம் ராமனுக்குள்ள பிரியமும் மதிப்பும் முன்னை விட அதிகரித்தது என்றே சொல்ல வேண்டும்.

''காதலி! ஜனகர் மகள் அல்லவா நீ? ஆனபடியால் இத்தகைய உயர்ந்த லக்ஷ்யம் கொண்ட பேச்சைப் பேசினாய். சீதையே, நீயே சொன்னாயல்லவா, க்ஷத்திரியர்கள் தரிக்கும் ஆயுதம் பிறரை ரட்சிப்பதற்காக வென்று? கஷ்டப்பட்டு ஜனங்கள் அழுதால் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா ஒரு க்ஷத்திரியன் எப்படி இருக்கலாம்? இங்கே நாம் வந்தவுடன் என்ன கேட்டோம்? இந்த முனி சிரேஷ்டர்கள் தங்களுடைய கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டு, 'நாதனே, நீயும் உன் தம்பியும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று முறையிட்டார்கள். இந்த வனத்தில் தவம் செய்து கொண்டிருக்கிற ரிஷிகளைக் கொன்று தின்று வரும் இந்த ராக்ஷசர்களுடைய இம்சையைப் பொறுக்க முடியாமல் முறையிட்டார்கள். 'எலும்புக் குவியலைப் பார்' என்று அவர்கள் எனக்குக் காட்டினார்கள்.

'எந்தை! மற்(று)யாருளர்
　　இடுக்கண் நீக்குவார்
வந்தனை யாம்செய்த
　　தவத்தின் மாட்சியால்'
'உருளுடை நேமியால்
　　உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன்
　　புதல்வ! போக்கிலா
இருளிடை வைகினேம்
　　இரவி தோன்றினாய்
அருளுடைய வீரநின்
　　அபயம் யாம்'

''ஆயுதம் தரிக்கும் ராஜகுமாரர்களாகிய நாம் இந்தப் புலம்புதலைக் கேட்டுச் சும்மா இருக்க முடியுமா? அரசனுடைய கடமையாயினும் க்ஷத்திரிய குலத்தின் கடமையுமாகும். என்னுடைய நன்மையை உத்தேசித்து நீ சொன்னாய். நீ சொன்னது சரியே என்று வைத்துக் கொண்டாலும் நான் வாக்குக்



கொடுத்து விட்டேன். 'நீயே சரணம்!' என்றார்கள். நானும் 'உங்களைக் காப்பேன்' என்று சொல்லி விட்டேன். இவ்வாறு பிரதிக்ஞை முடிந்து போயிற்று. இனி அதைப் பொய்யாக்க முடியுமா? நான் பொய்யனாகப் போனால் நீ பார்த்துச் சகிப்பாயா? 'என்ன கஷ்டம் வந்தாலும் நான் காப்பாற்றுகிறேன்' என்று சொல்ல வேண்டிய சொல் சொல்லியாகி விட்டது. அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவது என் கடமை. சக தரும சாரிணியான உன்னுடைய தருமமும் ஆகும். நீ வேறு நான் வேறு அல்லவே!'' என்றான் ராமன்.

இப்படியாக அவர்கள் பேசிக் கொண்டே நடந்து சென்றார்கள்.

இவையெல்லாம் மழைக்கு முன் வரும் காற்றைப் போல் நடக்கப் போகும் அனர்த்தங்களுக்குச் சூசனையாகக் கவி அமைத்திருக்கிறார். வெறுமனே பக்கம் நிரப்புவதற்கல்ல.

**த**ண்டகாரண்யத்தில் ரிஷிகளினிடையில் பத்து வருஷங்கள் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் யாதொரு கஷ்டமுமில்லாமல் கழித்தார்கள்.

தண்டகாரண்யப் பெருங் காட்டில் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் ஒரு ரிஷி மண்டலம். அநேக ரிஷிகள் அங்கே ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு தவ வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஒரு ஆசிரமத்தில் ஒருமாதம், இன்னொரு ஆசிரமத்தில் மூன்று மாதம் இப்படிப் பல ஆசிரமங்களில் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் சந்தோஷமாகக் காலங் கழித்தார்கள். வனத்தின் அழகு, சொல்ல வேண்டியதில்லை. மான் கூட்டங்கள், காட்டு எருமைகள், வராகங்கள், யானைகள், பறவைகள், அழகிய மரங்கள், செடிகள் கொடிகள், கண்ணைக் கவரும் நீலோற்பல - தாமரைத் தடாகங்கள், நீர்ப் பறவைகள் இவற்றையெல்லாம் கவி வர்ணித்திருக்கிறார். இப்படிஇயற்கை அழகுகளை அனுபவித்துப் பாடும் கவிகளில் வால்மீகி முதல் இடம் பெற்றவர். அதில் அவருக்கு அடங்காத ருசி. பாட்டின் நாதமும் அரண்யம் போலவே கம்பீரமாக இருக்கும்.

ரிஷிகளினிடையில் வாசம் செய்வதில் உண்டான சத்ஸங்க மகிழ்ச்சியைப் பத்தாண்டு ராமன் அனுபவித்தான். கூட லக்ஷ்மணனும் தேவியும் இருந்ததனால் ராமனுடைய ஆனந்தம் மும்மடங்காயிற்று.

பத்து ஆண்டுகளை ஒரு அத்தியாயத்தில் முடித்து விடுகிறேனே என்று குறைபடலாகாது. சந்தோஷமாகவும் சுகமாகவும் கழியும் காலம் இலக்கியத்தில் சுருக்கமாகத்தான் முடியும்.

**இ**ப்படிப் பத்து ஆண்டுகள் கழிந்து, வனவாச விரதத்தின் காலவரை அனேகமாகத் தீர்ந்து போனதாக எண்ணும் சமயத்தில், அகஸ்திய முனிவரைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆசை ராமனுக்கு உண்டாயிற்று.

அகஸ்தியர் விசுவாமித்திர முனிவரைப் போலவே மூவுலகிலும் புகழ் பெற்ற முனிவர். இமயமலை முதல் விந்தியமலை வரையில் உள்ள அறிவும் தவ வன்மையும் ஒரு தட்டில் வைத்து, அகஸ்திய முனிவர் ஒருவர் தென் தட்டில் அமர்ந்தால் அவருடைய பாரத்தினால் தென் தட்டு கீழே இறங்கிவிடும் என்று சொல்வார்கள். பார்வதி-மகாதேவ விவாகத்தைப் பற்றிச் சொல்லப்படும் கதை அனைவருக்கும் தெரியும். எல்லா முனி சிரேஷ்டர்களும் கைலாசம் சென்று பூபாரம் அங்கே அதிகமாகப் போனபடியால் அகஸ்தியர் தெற்கே இருந்து கொண்டு பூமியின் நிலையைக் காத்தார் என்பது அகஸ்தியருடைய மகிமையைக் காட்டும்.

**ஒ**ரு காலத்தில் விந்தியமலை வளர்ந்து மிக உயர்ந்து கொண்டே போய், சூரியனுடைய தக்ஷிணாயன உத்தராயணப் போக்கைத் தடுப்பதாகப் பயந்து அகஸ்தியரைத் தேவர்கள் இறைஞ்சினார்கள் என்றும், முனிவர் விந்திய மலைக்கு எதிரில் நின்ற போது மலை தெண்டனிட்டு வணங்கிற்று என்றும், முனிவர், ''நீ என்றென்றைக்கும் இவ்வாறே குறையாமல் இருப்பாய்!'' என்று ஆசீர்வதித்தார் என்றும், அதனால், விந்திய மலை மிக நீண்ட மலையாய்ப் படுத்துக் கிடக்கிறது என்றும் சொல்லுவார்கள்.

**வா**தாபி, இல்வலன் என்ற இரண்டு அரக்கர்கள் ரிஷிகளை மிகவும் தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள். வாதாபி ஒரு வரம் பெற்றிருந்தான்.

ஐந்நூறு, ஐந்நூத்தி ஒண்ணு, ஐந்நூத்தி ரெண்டு...

இங்கே என்ன பண்றே? அம்மா உன்னைத் தேடுறாங்க.

நட்சத்திரங்களைத்தான் எண்ணுறேன்!

ஆ! நான் சொல்றேன் கேட்டுக்க. பன்னிரண்டு லட்சத்து எண்பத்தைந் தாயிரத்து ஐந்நூற்று நாற்பத் தொன்பது கோடி!

அடேயப்பா! எப்படிச் சொல்றே?

அதென்ன, பங்கு மார்க்கெட் ஊழல்ல சம்பந்தப்பட்டிருந்த தொகையை விடவா அதிகமா இருக்கப் போறது?

D.

அவன் உடல் எவ்வளவு வெட்டித் துண்டு துண்டாகச் செய்யப்பட்டாலும் பிறகு ஒன்று சேர்ந்து உயிருடன் தோன்றும் என்கிற வரம் பெற்றிருந்தான். இல்வலன் ரிஷிகள் ஆசிரமத்துக்குப் பிராமண வேஷம் தரித்துப் போவான். ''சுவாமி, என் இல்லத்துக்கு வந்து சிராத்த போஜனம் பெற்றுக் கொண்டு ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று கேட்பான். சாஸ்திர விதிப்படி இத்தகைய விண்ணப்பத்தை எந்தக் காரணம் கொண்டும் மறுக்கக் கூடாது. ரிஷிகள் போய்ச் சிராத்தமும் போஜனமும் முடிந்த பிறகு, ''திருப்தியா?'' என்று இல்வலன் சிராத்த விதிப்படி கேட்பான். அவர்களும் வழக்கப்படி ''திருப்தி'' என்பார்கள். அப்போது இல்வலன் ''வாதாபி! வெளியே வருவாய்'' என்பான். வாதாபி வஞ்சகமாக ஆட்டு உடல் தரித்து வெட்டிச் சமைக்கப்பட்டு, சிராத்த போஜனத்துடன் பித்ருக்கள் திருப்திக்காக போஜனம் உண்டவர்களுடைய வயிற்றிலிருப்பான். இல்வலன் ''வா!'' என்றதும் வயிற்றிலிருந்த வாதாபி பிராமணருடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து விடுவான். இம் மாதிரி பல ரிஷிகள் மாண்டார்கள். வாதாபி தான் அடைந்த வரத்தின் நிபந்தனைப்படி ஆயுதமின்றியும் எதிர் நின்று எதிர்க்காமலும் ரிஷிகளை இவ்விதமாகக் கொன்று வந்தான்.

ஒருநாள் அகஸ்தியரை, இந்த வஞ்சக முறையில் சிராத்தத்துக்கு இல்வலன் அழைத்தான். அவர்களுடைய சூழ்ச்சியின்படி வாதாபி அகஸ்திருடைய வயிற்றுக்குள் சிராத்த போஜனத்துடன் மேஷ மாமிசமாகப் பிரவேசித்தான். அகஸ்தியருக்கு இது தெரியும். அவர் கணபதியை உபாசித்து அடைந்திருந்த சக்தியினால் அரக்கனை முற்றிலும் ஜீரணித்து விட்டார்.

''திருப்தியா?'' என்று கேட்டான் இல்வலன்.

''ஆகா! திருப்தி!'' என்றார் அகஸ்தியர்.

''வாதாபி, வெளியே வா!'' என்றான் இல்வலன்.

அகஸ்தியர் சிரித்தார். ''வாதாபி ஜீரணமாய்ப் போனானே'' என்றார்.

இதைக் கேட்ட இல்வலன், ''என் சகோதரனைக் கொன்றீரா?'' என்று ரோஷத்துடன் அகஸ்தியர் பேரில் பாய்ந்தான். அகஸ்தியருடைய கோபப் பார்வையினால் அந்தக் கணமே இல்வலன் எரிக்கப்பட்டான்.

அகஸ்தியர் இருந்த இடத்தில் எந்த ராக்ஷசரும் வர மாட்டார்கள். அவர் மற்ற முனிவர்களுக்குப் பெருங்காப்பாக இருந்தார்.

இராமன் அகஸ்தியருடைய தம்பியின் ஆசிரமத்துக்குச் சென்று முனிவரைக் கண்டு ஆசி பெற்றுக் கொண்டு அகஸ்தியர் இருப்பிடம் சென்றான். தெற்கே சென்று அவர் ஆசிரமம் இருந்த இடத்தை அடைந்து தூரத்திலிருந்தே அந்தப் பிரதேசத்தின் காந்தியையும், மிருகங்களும் பறவைகளும் பயமின்றி விளையாடிக் கொண்டிருந்ததையும், பிராமணர்கள் பூஜைக்குப் புஷ்பம் கொய்து கொண்டிருப்பதையும் பார்த்து மகிழ்ச்சியடைந்தான்.

''லக்ஷ்மணா! நீ சென்று முனிவருக்குத் தெரியப் படுத்தி உத்தரவு பெறுவாய்'' என்றான் ராமன்.

இளையவன் சென்று முனிவருடைய சீடன் ஒருவன் மூலம், ''தசரதன் குமாரன் ராமசந்திரனும் தம்பியும் ஜானகியும் முனிவரின் ஆசியைப் பெற்று மேன்மையடைய வந்து காத்திருக்கிறார்கள்'' என்று சொல்லி அனுப்பினான்.

அனுமதி பெற்றதுடன் முனிவரே எழுந்து அவசரமாகச் சக்கரவர்த்தித் திருமகனை வரவேற்றுக் கிரமப்படி உபசரித்து ஆலிங்கனம் செய்தார்.

''நீங்கள் சித்திர கூடம் வந்த போதே எனக்கு விஷயம் தெரிந்தது. எப்படியும் ஒரு நாள் நீங்கள் வருவீர்கள் என்று இவ்வளவு காலம் எதிர் பார்த்துக் கொண்டேயிருந்தேன். நீங்கள் எடுத்துக் கொண்ட விரதம் பூர்த்தியாகும் காலம் சமீபித்தது. இவ்விடம் நீங்கள் சுகமாக இருக்கலாம். இங்கே ராக்ஷசர்களுடைய தொந்தரவு இல்லை'' என்றார்.

''முனிவருடைய ஆசி பெற்று நான் பாக்கியவான் ஆனேன்! ஆனால் நான் தண்டகாரண்ய ரிஷிகளுக்கு வாக்குத் தந்திருக்கிறேன். முனிவருடைய ஆசி பெற்றுக் கொண்டு நாம் தண்டகாரண்யம் திரும்ப வேண்டும்'' என்றான் ராமன்.

''நீ சொல்லுவது சரியே!'' என்று அகஸ்தியர் சொன்னார்.

பிறகு அகஸ்தியர் ராமசந்திரனுக்கு மகா விஷ்ணுவுக்காக விசுவகர்மா செய்த வில்லும், என்றும் குறையாத அம்புத் தூணியும், கத்தியும் தந்தார். ''ராமனே, ராக்ஷசர்களை ஒழிப்பாயாக, முன் மகா விஷ்ணுவானவர் இந்த ஆயுதங்களைத் தந்தார். நீயும் இவற்றைத் தரித்து அவர்களை ஒழிப்பாயாக'' என்று ஆசீர்வாதம் செய்தார்.

பிறகு அகஸ்தியரை யோசனை கேட்டுச் சக்கரவர்த்தித் திருமகன் பஞ்சவடியில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு அங்கே மிகுதியிருந்த வனவாச காலத்தைக் கழிப்பது என்று தீர்மானித்தான்.

''ராஜகுமாரர்களே, போய்வாருங்கள். சீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அவள் காட்டில் வசிக்கத் தகாத ராஜகுமாரி. ராமனே, உன்னிடம் அவளுக்குள்ள பிரீதியால் கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் வனவாசம் செய்து வருகிறாள். பெண்கள் சாதாரணமாக சுகத்தையே விரும்புவார்கள். கஷ்ட நிலையைவிட்டு அகல்வார்கள். ஸ்திரீகளுடைய உள்ளம் மின்னலைப் போலச் சஞ்சல சுபாவமும் கத்தியைப் போன்ற கூர்மையும் கருடனையும் வாயுவையும் போன்ற விரைவும் படபடப்பும் கொண்டது. இவையெல்லாம் சாதாரணமாகப் பெண்களின் சுபாவத்திலுள்ள தோஷங்கள். இது ஈசுவர சிருஷ்டி. ஆயினும் சீதையினிடத்தில் இந்தத் தோஷங்கள் இல்லை. அருந்ததியைப் போன்றவள். ராமசந்திரனே! லக்ஷ்மணனுடனும் வைதேஹியுடனும் நீ எங்கே இருந்தாலும் அந்த இடம் அழகு பெறும். பஞ்சவடி மிக சுந்தரமான இடம். உணவுக்கு வேண்டிய பழமும் கிழங்கும் கிடைக்கும் இடம். அவ்விடத்தில் இருங்கள். கோதாவரி நதிக்கரையின் அழகைச் சீதை மிக அனுபவிப்பாள். சீதையையும் ரிஷிகளையும் அவ்விடம் நீ இருந்து கொண்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவாயாக. தசரத சக்கரவர்த்தி உனக்கு விதித்த விரத காலம் முடிந்து வருகிறது. யயாதியைப் போல் தசரதனும் மூத்த மகனான உன்னால் கடைத்தேறினான்.''

இவ்வாறு மகாஞானி அகஸ்தியர் ராம லக்ஷ்மணர்களையும் சீதையையும் மிக்க அன்புடன் திரும்பத் திரும்ப ஆசீர்வதித்துப் பஞ்சவடிக்கு அனுப்பினார்.

(தொடரும்)

**தேக்கு மரங்களையும் சவுக்கு மரங்களையும் வளர்ப்பது போல் சந்தன மரங்களை வளர்த்தால் என்ன? என்று கேட்கிறார் முன்னாள் வனத்துறைத் தலைவர் எஸ். கோண்டாஸ்.**



# தேவை : சந்தனத் தோட்ட வீரப்பன்

நம் வீட்டுக் கொல்லைப்புறத்தில் சந்தன மரம் பயிரிட்டால் வளருமா என்றால் நிச்சயம் வளரும். ஆனால் மரத்தின் உள்ளே சந்தனம் இருக்காது! ஏன்? எப்படி சந்தனக் காட்டு மரங்களில் மட்டும் சந்தனம் இருக்கிறது? நிலத்தின் தன்மைதான் காரணம்.

சந்தன மரம், 'வைரம் பாய்ந்த மணமுள்ள சந்தனத்தைப் பெற்று வளர்வதற்கு ஏற்றதான பூமி வளம் தமிழகத்தில், ஜவ்வாது, கொல்லி, கல்ராயன் மலைகளில் காணப்படுகிறது.

வருடத்துக்குச் சுமார் 50லிருந்து 60 செ.மீ. மழையும் மேலே இரண்டடி லகுவான மண், கீழே கடினமான கற்பரப்பு கொண்ட நிலப் பகுதியும் சந்தன மரம் வளர்வதற்குத் தேவையானது. இத்தகைய தன்மையுடைய நிலப்பகுதிகளில் சந்தன மரங்கள் ஆழமாக வளர்வதற்கு, இயற்கையான தடை இருக்கிற காரணத்தால் தடையை, அல்லது அழுத்தத்தை மீறி மரம் வளரும் போது, மரத்தில் ஏற்படும் உயிரியல் ரீதியான மாறுதல்களால் ஒருவிதமான கழிவு வெளிப்பட்டு, மரத்தின் உள்ளே ஒரு தண்டாக வளருகிறது. அதுதான் சந்தனமாக மணக்கிறது! இந்தச் சூழ்நிலையில், நம் வீட்டுக் கொல்லையிலோ மற்ற இடங்களிலோ பயிரிட்டால், சந்தன மரம் வெறும் விறகுக் கட்டையாகத்தான் பயன்படும்.

தமிழகத்தில் சுமார் எட்டு லட்சம் ஏக்கரும், கர்நாடகத்தில் சுமார் 12 லட்சம் ஏக்கரும், சந்தன மரங்கள் வளரக்கூடிய நிலப் பகுதியைப் பெற்றிருக்கின்றன. இதில் 90 சதவீதம் காடுகளாகும். உலக சந்தன உற்பத்தியில் கர்நாடகா மற்றும் தமிழகத்தின் பங்கு மட்டும் சுமார் 95 சதவீதம்! சுமார் ஐந்து சதவீதம் இந்தோனேஷியாவின் பங்கு. தமிழகம் கர்நாடகாவைத் தவிர இந்தியாவில் வேறெங்குமே சந்தன மரங்கள் கிடையாது. அப்படியே இருந்தாலும் அம் மரங்களால் பயனில்லை.

தமிழ்நாட்டிலுள்ள மலைப் பகுதிகளிலிருக்கும் தனியார் நிலங்களில் சந்தன மரங்கள் வளர்வதற்கு ஏற்ற பூமி வளம் உள்ளது. வளர்ப்பதற்குத் தடை ஏதும் இல்லை. ஆனால் சங்கடம் என்னவென்றால், விதை போட்டு முளை விட்டதிலிருந்து, மரத்தை வெட்டி அரசு டெப்போவுக்குக் கொண்டு சென்று, ஏலத்தில் விற்றுப் பணத்தை வசூல் செய்து கொண்டு வரும் வரையில், வன இலாகா கண்காணிப்பிலேயே செயல்பட வேண்டியிருப்பதால், ஏகப்பட்ட சிவப்பு நாடா சட்டங்கள்; கெடுபிடிகள். இதனால் மிகக் குறைவான எண்ணிக்கையில்தான் தற்போது சந்தன மரம் பயிராகிறது. அப்படி வளர்ப்பவர்கள் தங்கள் நிலத்தில் இருக்கக்கூடிய சந்தன மரத்தை வெட்டும் போது, அடுத்ததாக இருக்கும் காட்டுப் பகுதியில் உள்ள சில மரங்களையும் 'அபேஸ்' செய்து விடுகிறார்கள்.



● எஸ். கோண்டாஸ்

கர்நாடகாவில் இயற்கையாகவே வளர்ந்த சந்தன மரங்களில் பெரும் பகுதி வெட்டப்பட்டு விட்டன. வெட்டப்பட்ட இடத்தில் மறுபடி மரங்கள் வைக்கப்படவில்லை. ஆனால் தமிழ்நாட்டில் நிலைமை அவ்வளவு மோசமாக இல்லை. கொல்லி

கல்கி

ஆகஸ்டு 1

ஆண்டு மலர்

# 'சூப்பர்' சிறப்பிதழ்

மலைப் பகுதிகளில் இன்னமும் வளமான சந்தன மரங்கள் இருக்கின்றன. அங்கே நல்ல சாலைகள் போடுவதற்குக் கூட யோசிக்க வேண்டியிருக்கிறது. காரணம், சந்தன மரங்ககளை வெட்டி லாரிகளில் கலப மாகக் கடத்துவதற்கு வசதியாகப் போய் விடுமே!

சந்தன மரத்தைத் தேவையானபோ தெல்லாம் வெட்டி விட முடியாது. அதாவது பச்சை மரத்தை வெட்டவே கூடாது. 'ஸ்பைக்' என்னும் நோய் வந்து பட்டுப் போகும் மரத்தைத்தான் வெட்ட வேண் டும். இந்த நோய் மரத்துக்கு பத்து வருடங் களிலும் வரலாம், நாற்பது வருடங்களிலும் வரலாம். அதுவரை பொறுத்திருக்கத்தான் வேண்டும்.

இப்போது தேக்கு மரப் பண்ணை கள், வியாபார ரீதியில் வருவது போல், சந்தனமரப் பண்ணைகளும் வருவதற்கு வாய்ப்பு உண்டு. நல்ல நிலப்பரப்பாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்து, யாராவது ''பிர மோட்'' செய்தார்களென்றால் வர்த்தக ரீதி யில் வெற்றி பெற வாய்ப்பு உண்டு. சுமார் 30, 40 வருடங்களில் மரங்களை வெட்ட லாம். ஆனால், வன, மற்றும் ரெவின்யூ இலாகா அதிகாரிகளின் தொந்தரவுகளி லிருந்து தப்ப, அவர்களையும் திட்டத்தில் பங்குகொள்ளச் செய்ய வேண்டும்.

மேலும், மலைப்பகுதியில் உள்ள சிறு விவசாயிகளுக்கு மான்யம் கொடுத்து சந்தன மரங்கள் வளர்க்கச் சொல்லலாம். மரங் களின் ஊடே பழச் செடிகளும் வைக்கலாம். தனியாரும், அரசும் இந்த முயற்சிகளில் ஈடு பட்டால் சந்தன மரங்களின் எண்ணிக்கை அதிகமாகும்.

ஒரு டன் சந்தனக் கட்டையின் விலை சுமார் இரண்டரை லட்சம் ரூபாய். கட்டைக ளாக ஏற்றுமதி செய்யத்தான் இப்போது தடை உள்ளது. ஆனால், கட்டைகளைப் பிழிந்து சந்தன எண்ணெய்யாக ஏற்றுமதி செய்யலாம். ஐரோப்பிய நாடுகளிலும், அரபு நாடுகளிலும், சந்தன எண்ணெய்க்கு நல்ல கிராக்கி இருக்கிறது. நமக்கும் ஏராள மான அந்நியச் செலாவணி கிடைக்கும்.

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

வாசகர் யோசனை : ஜி. கணேசன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka